# பிரிட்டானியாவின்
# 2 அழகான பரிசு-டின்கள்!

இதோ! பிரிட்டானியாவின் வண்ணமிகு வரிசையில்
சேர்க்கப்பட்டிருக்கும் 2 டின் கள்—'ரோஸெஸ்'&'பொகே'.
இவற்றுள் நற்சுவை கொண்ட பலரக பிரிட்டானியா
பிஸ்கட்டுகள் அடங்கியுள்ளன. சிறப்பு
வாய்ந்த இவற்றை எல்லா
விசேஷங்களிலும் நல்ல
பரிசாக வழங்கலாம்;
காலியான டின்களும்
மற்றப் பொருள்களை
வைத்துக்கொள்ள
மிக உத்தம
மானவை!

JWT BC 1339R/A

## பிரிட்டானியா
## பிஸ்கட்டுகள்




இப்பொழுது வெளிநாடுகளிலும் புகழ் பெற்றவை



# கல்கி



## பொருளடக்கம்

குரோதி மாசி 3 — பிப்ரவரி 14



புதிய ஆலயப்
பிரவேச இயக்கம்
தேவை!







சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி
உடைந்தது.





மலர் 24 ● இதழ் 29

# சமரஸமா? சமவாய்ப்பா?

"ஹிந்தியானது இந்திய யூனியனின் ஆட்சி மொழியாகிவிட்டது. எனவே இப்போது அலுவல் முழுவதும் ஹிந்தியிலேயே நடத்தப்படும்."

—இவ்வாறு ஜனவரி 30ந்தேதியிட்ட மத்திய உணவு மந்திராலயத்தின் அறிக்கை ஒன்று கூறுவதாக பிப்ரவரி 6ந்தேதி 'ஹிந்து' தெரிவிக்கிறது.

இந்தச் சூழ்நிலையில்தான் திரு காமராஜ் அவர்கள் ஆட்சிமொழி விஷயத்தில் 'சமரஸம்' செய்து கொள்ள வேண்டுமென்கிறார். அவர் சொல்வது போலவே வேறு பலரும் நினைக்கிறார்கள். 'ஹிந்தி எதிர்ப்பாளர்கள் இவ்வளவு பிடிவாதமாக இருக்கலாமா? எந்த சமரஸ யோசனைக்கும் இணங்காமல் இருக்கலாமா?' என்கிறார்கள்.

துரதிருஷ்டவசமாக இவ்விஷயத்தில் விட்டுக் கொடுத்து சமரஸம் செய்து கொள்வதற்கு இடமே இல்லை. 'பூரண சுதந்திரம் வேண்டும்' என்று பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடியபோது வேறெந்த சமரஸத்தையேனும் ஒப்புக் கொள்ள முடிந்ததோ? அதுபோல்தான் இதுவும். நீதிக்கும் அநீதிக்குமிடையே, தருமத்துக்கும் அதருமத்துக்குமிடையே, சத்தியத்துக்கும் அசத்தியத்துக்குமிடையே எந்த நிலையிலும் சமரஸம் செய்து கொள்வதற்கில்லை.

ஆங்கிலம் ஆட்சி மொழியாக இருப்பதால் தேசம் முழுவதற்கும் சமநீதி கிடைக்கிறது. அது நூற்றைம்பதாண்டுகளாக நிர்வாகத்திலும், போதனையிலும் நன்கு பழக்கப்பட்டுள்ளது. இன்றும் ஆபீசுகளிலும் அரசியலிலும் வேலை செய்யும் தேசத்தின் அறிவாளிகளை யெல்லாம் அதுதான் இணைக்கிறது. ராஜ்யங்களுக்கிடையே தொடர்பு மொழியாகவும் ஆங்கிலமே விளங்குகிறது. உலகத் தொடர்புக்காக ஆங்கில ஞானம் எல்லா இந்தியருக்கும் எப்போதும் அவசியம் என்பதை ஆட்சித்தலைவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள்.

ஹிந்தி மொழி நாட்டில் நாற்பது சதவிகிதத்துக்கும் குறைவாக உள்ளவர்களுக்குத்தான் தாய்மொழியாக இருக்கிறது. 'ஹிந்தி மொழி' என்று பொதுப் பெயரிட்டாலும் இந்தப் பொது மொழிக்குள் எத்தனையோ வகைமொழிகள் இருக்கின்றன. ஒரு பகுதியினர் பேசும் ஹிந்தி மற்றொரு பகுதியினருக்குப் புரியாது. எனவே, நிர்வாகக் காரியங்களுக்காகத் தயாரிக்கப் போகும் செயற்கை ஹிந்தி மொழியை ஹிந்தி பேசாதவர் மட்டுமின்றி ஹிந்தியர்களே புதிதாகக் கற்கத்தான் வேண்டியிருக்கும். இப்படிப்பட்ட ஒரு பிரதேச மொழியைச் சிம்மாதனத்தில் ஏற்றுவதால் அம்மொழி பேசாதவர்கள் யாவரும் சமவாய்ப்பை இழக்கிறார்கள். சம வாய்ப்பு என்பதுதான் ஜனநாயகத்தின் மையப் பண்பு. அதை இழக்க நேர்ந்துள்ளபோது எப்படி 'சமரஸம்' பேசி அந்த இழப்பை ஈடுசெய்து கொள்ள முடியும்? எவ்வகையிலும் சிறப்புள்ளதும், எல்லாருக்கும் பொதுவானதுமான ஆங்கிலத்தை விடுத்து, பட்சபாதத்துக்கும், திறமைக் குறைவுக்கும் இடமளிக்கும் ஹிந்தியுடன் எவ்வாறு சமரஸம் செய்து கொள்வது?

சமரஸ யோசனைதான் என்ன? 'ஹிந்தி பேசும் ராஜ்யங்களுடன் மட்டுமே தில்லி ஹிந்தியில் தொடர்பு கொள்ளும்; மற்ற ராஜ்யங்களோடு ஆங்கிலத்திலேயே



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

தொடர்பு கொள்கிறோம்' என்பதை ஒரு சமரஸ யோசனையாகக் கூறுகிறார்கள். அவ்வாறெனில் ஹிந்தி வழங்கும் ராஜ்யங்களுக்கும் மத்திய சர்க்காருக்குமுள்ள தொடர்பில் மற்ற ராஜ்யங்களுக்கு எவ்வித பங்கும் ஈடுபாடும் இல்லை என்று பொருளா? மத்திய சர்க்கார் என்பது தேசம் முழுவதற்கும் பொதுவானது அல்லவா? அதனுடைய ஹிந்தி மொழிபெயர்ப்பு இலாகாக்கள் விழுங்கும் கோடிக்கணக்கான ரூபாய்களை ஹிந்தியர் மட்டுமா செலுத்துகிறார்கள்? மத்தியசர்க்காரும் ஹிந்தி ராஜ்யங்களும் சேர்ந்து ஏதோ தனி தேசம் என்றும், ஹிந்தி பேசாத ராஜ்யங்கள் தனி தேசம் என்றும் நினைத்துத்தான் சில பிருஹஸ்பதிகள் 'அவர்களுக்குள் மட்டும்தானே ஹிந்தித் தொடர்பு, நமக்கென்ன வந்தது?' என்று பெரும் போக்காகக் கூறுகிறார்கள். அதாவது தி.மு.க.வின் பிரிவினைக் கோரிக்கையை எதிர்க்கும் சர்க்கார் இப்போதே பிரிவினை நிகழ்ந்து விட்டாற் போன்ற எண்ணத்தை ஏற்படுத்தி விட்டது.

'ஹிந்தி கூடாது' என்பதில் நம் பகுதி மக்கள் தீவிரமாக இருப்பது போல் 'ஆங்கிலம் கூடாது, ஹிந்திதான் வேண்டும்' என்பதில் வடஇந்திய மக்கள் தீவிரமாயிருப்பதை ஒரு பத்திரிகை எடுத்துக் காட்டுகிறது. வாஸ்தவம்தான். ஆனால் உணர்ச்சியில் நியாயம் உள்ளதா,' இல்லையா என்பதையும் பார்க்க வேண்டுமல்லவா? இதுவரையில் நடைமுறையில் இருந்ததை நீடிக்க வேண்டும் என்று நாம் சொல்லுகிறோம். அவர்கள் புதிதான ஒரு பாஷையை ஒப்புக் கொள்ளச் சொல்லுகிறார்கள். சம வாய்ப்பு அழிந்து இரண்டாந்தரப் பிரஜையாவோம் என்பதால் நாம் ஹிந்தியை எதிர்ப்பது நியாயம். ஹிந்தி மொழிக்காரர்களின் வெறியில் என்ன நியாயம் இருக்கிறது? தங்களுடைய ராஜ்யங்களில் ஹிந்தியிலேயே நிர்வாகம் நடைபெறுவதோடு அவர்கள் நிறுத்திக் கொள்ள வேண்டியதுதான். ஆங்கிலம் அந்நிய மொழி என்பதால் அவர்களுக்கு இவ்வளவு கொதிப்பு இருக்குமாயின், பாரத நாட்டில் உள்ள ஹிந்தி பேசாத மக்கள் சுதேசி ஹிந்திவாலாக்களிடமே அடிமைப்படுவதற்கு எவ்வளவு கொதிப்படைவார்கள்?

'ஆங்கிலத்தை நீடிக்க வேண்டும் என்று சாஸனத் திருத்தம் செய்வதற்கு ஆதரவு தரமாட்டேன். அப்படிச் செய்தால் ஆங்கிலத்தைத் திணிப்பதாக வட இந்தியர் கருதுவர்' என்கிறார் திரு காமராஜ். வட இந்திய சகோதரர்கள் இவ்வளவு பேதமையாக ஒருபோதும் கருதமாட்டார்கள். ஹிந்தி ஆட்சி மொழியானால்தான் நாட்டின் ஒரு பகுதியினர் விசேஷ அநுகூலங்களையும், மற்றவர்கள் பிரதிகூலங்களையும் அடைகிறார்கள். எனவே, இந்த ஏற்பாட்டை மத்திய சர்க்கார் பிடிவாதமாக அமுலாக்கும் போது அதனை ஹிந்தித்திணிப்பு என்று சொல்வது மிகவும் நியாயம். ஆனால் ஆங்கிலத்தை நீடிப்பதால் யாரும் பிரத்தியேக சலுகை பெறப் போவதில்லையே! ஹிந்தியருக்கு அதனால் எந்தத் தனிப்பட்ட பிரதிகூலமும் இல்லையே! நாட்டு மக்களின் சகலரும் ஒரே நிலையில் வாழ வழி செய்யும் திட்டத்தை யார் மீது யார் திணிப்பதாக வாதிட முடியும்?

'சமரஸ' யோசனைகளில் ராஜ்யவாரியாக ஸ்தானங்கள் கணக்கிட்டு ஒதுக்கலாம் என்பது ஒன்று. திறமை என்ற ஒரே அடிப்படையில்தான் உத்தியோகங்களுக்குத் தேர்வு செய்யப்பட வேண்டும். மத்திய சர்க்காரில் ஓர் இந்தியப் பிரஜை வேலைக்கு விண்ணப்பிக்கிறார் என்றால் அவரது தகுதியைத்தான் பார்க்க வேண்டுமேயன்றி, அவர் பீஹாரியா, வங்காளியா, குஜராத்தியா என்று ஏன் பார்க்க வேண்டும்? சம வாய்ப்பு என்ற ஜனநாயகக் கருப்பொருளைச் சிதைக்கும் யோசனைதான் இந்தக் 'கோட்டா' திட்டம்.

திறமையற்றவர்கள் வேலைக்கு எடுக்கப்பட்டு நிர்வாகம் ஊறுபடுவதற்கு இது வழியாகும். மத்திய சர்வீஸ் பரீட்சைகளில் ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் இவ்வளவு ஸ்தானம் என்று ஒதுக்குவதால் ஒரு ராஜ்யத்தில் அதிக மார்க் வாங்கும் ஒருவரைவிட வேறொரு ராஜ்யத்தில் குறைவான மார்க் வாங்கும் ஒருவர் தேர்வு செய்யப்பட நேரும். சில பிரதேசங்களுக்கு இவ்வளவு ஸ்தானம் அளிக்கத்தான் வேண்டும் என்பதால் மிகவும் தகுதி குறைந்தவர்களும் தேர்வு செய்யப்படுவார்கள். தகுதியற்றவர்கள் நடத்தும் நிர்வாகத்தின் லட்சணத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? எழுதிய விடையைப் பார்த்து மார்க் அளிக்காமல், எழுதியவரின் ராஜ்யத்தைப் பார்த்து 'மாடரேஷன்' செய்வது பற்றியும் பேசுகிறார்கள். இது குறித்து 'தினமணி' கூறுகிறது: 'மாடரேஷன் முறை அநீத உணர்ச்சி பற்றிய மாச்சரியங்களை ஊட்டும். 'கோட்டா' முறையானது, தேர்தலில் 'தனித் தொகுதி' ஏற்பட்டதன் மூலம் ஏற்பட்ட தீமைகள் போன்ற பல விபரீதங்களுக்கு இடம் தரும். தேசம் துண்டாடப்பட்டதற்குச் சமமான நிலைமையையே விளைவிக்கும். இரண்டு யோசனைகளும் சேர்ந்து (1) தேச நிர்வாகத்தின் திறமையைப் பாதித்து, (2) மாச்சரியங்களை வளர்த்து (3) தேச ஐக்கியத்தைச் சிதைத்து விடும்.'

கோட்டா முறையை ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் வரவேற்கவில்லை என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

பப்ளிக் சர்வீஸ் பரீட்சையில் 'சமரஸம்' செய்து ஹிந்திக்கும் இடமளிப்பதால் இருவேறு அடிப்படையில் தரங்கள் நிர்ணயமாகி, புதுப் பட்சபாதங்கள் உண்டாகும். சமரஸம் என்ற பெயருக்காகச் சமநீதியை ஒரு போதும் விட்டுக் கொடுப்பதற்கில்லை.

'முப்பது ஆண்டுகளுக்குப் பின் ஹிந்தியை ஆட்சி மொழியாக்கலாம்' 'ஐம்பதாண்டுகளுக்குப்பின் ஆங்கிலத்தை அகற்றலாம்' என்றெல்லாம் இன்னொரு 'சமரஸ' யோசனை சொல்கிறார்கள். எதிர்காலப் பிரஜைகளின் தலையில் ஐந்தாண்டுத் திட்டக் கடன்களைச் சுமத்துவது மட்டும் போதும். ஆட்சிமொழி விஷயமாக அவர்களின் தலைவிதியை நாம் நிர்ணயிக்க வேண்டியதில்லை. வாயிதா போடுவதில் ஒரு பயனும் இல்லை. அதற்கு ஒப்புக்கொண்டால் முப்பதாண்டாயினும், ஐம்பதாண்டாயினும் இப்போதே ஹிந்திக்கு

அங்குரார்ப்பணம் செய்தால்தானே பிறகு அதற்குத் தயாராவோம் என்று வாதிப்பார்கள். அதற்கு நாம் சமாதானம் சொல்ல முடியாது. பாரபட்சங்கள் இப்போதே தோன்றத் தொடங்கி விடும். காலவரையறை பற்றி நாம் சமரஸம் செய்து கொள்வது ஆபத்தில்தான் முடியும்.

சமரஸ யோசனை சொல்பவர்களும் அவ்வப்போது தாங்கள் பேசும் இடத்தை அனுசரித்து 'தீரம்' பெறுகிறார்கள். ஸ்ரீமான்கள் அதுல்யகோஷ், நிஜலிங்கப்பா, சஞ்சீவ ரெட்டி, காமராஜ் ஆகியோரே தினையளவு எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள் எனில், அவர்களின் ராஜ்யத்தில் மலையளவு எதிர்ப்பிருக்க வேண்டும் என்பதை மத்திய சர்க்கார் புரிந்து கொள்ள வேண்டும். சில சமயங்களில் இத்தலைவர்கள் மிகவும் சூராகி விடுகிறார்கள். 'ஹிந்தியில் கடிதம் வந்தால் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன்' என்கிறார் ஒரு மந்திரி. 'ஹிந்திக் குறிப்பு வந்தால் கிழித்துப் போடுங்கள்' என்கிறார் இன்னொரு தலைவர். இதுவெல்லாம் இப்போது நடைபெறும் உபதேர்தல்களுக்காகப் பேசும் பேச்சு; சிறு பிள்ளைத்தனமான யோசனைகள். நாம் ஹிந்திக் குறிப்பைக் கிழித்துப் போட்டால் ஹிந்திக்காரர்கள் பதிலுக்கு ஆங்கிலக் கடிதங்களைக் கிழித்துப் போடுவார்கள். எனவே, பைத்தியக்காரத்தனமாக வீரம் பேசாமல், உண்மை நிலையை மத்திய சர்க்காருக்கு நம் தலைவர்கள் எடுத்துரைத்தாலே போதும்.

தமிழகத்தில் மட்டுமின்றி ஹிந்தி வழங்காத மற்றப் பகுதிகளிலும் விழிப்பு ஏற்பட்டு விட்டது! வங்காளத்து வழக்கறிஞர்களும், ஆந்திர சர்வகலாசாலையினரும், கர்நாடக மாணவர்களும் ஹிந்தித் திணிப்பை எதிர்க்கிறார்கள். கேரளத்திலும் பிரதமர் முன்பு ஹிந்திக்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. எனவே, ஹிந்தி எதிர்ப்பு தி. மு. க. வின் சூழ்ச்சி என்று கூறியவர்கள் இனியேனும் அந்த வாதத்தை நிறுத்திக் கொண்டு பிரச்சினையின் உண்மைத்தன்மையைப் புரிந்து கொள்ள வேண்டும். ஹிந்திப் பிரச்சினையில் தி. மு. க. அரசியலைப் புகுத்தவில்லை; மக்கள் நலனை மறந்து காங்கிரஸின் சார்பில் ஆட்சி மொழித் திட்டத்தை ஆதரிப்பவர்கள்தான் அதில் அரசியலைப் புகுத்தியிருக்கிறார்கள். எனினும், ஸ்ரீ ஜகஜீவன்ராம், ஜோஷி, ஜா போன்ற வட இந்தியத் தலைவர்களே இப்போது ஹிந்தித் திணிப்பைப் பற்றி அபாய எச்சரிக்கை செய்வதால் இனியேனும் நம் பகுதியில் உள்ள ஆளும் கட்சித் தலைவர்களும், அவர்களின் கிங்கரர்களும் உண்மையைப் பேச வேண்டும். சர்க்காரின் மௌடீகத் திறனால் மூடப்பட்ட பள்ளிகளையும் கலாசாலைகளையும் திறக்கு முன்னர் ஆட்சித் தலைவர்களின் கண் திறக்க வேண்டும்.

# குடந்தையில் வேத விழா

'வேதம் நிறைந்த தமிழ் நாடு' என்று கவி பாடினார். அப்படிப்பட்ட இந்நாட்டில், 'வேதம் நிறைந்த தமிழ் வீடுகள்' சில இன்னும் உள்ளன. இப்படிப்பட்ட வேதமும், வேத அக்னியும் நிறைந்த தமிழ் வீடுகளில் ஒன்று குடந்தை ஸ்ரீமான் அக்னிஹோத்திரம் தாததேசிக தாதாசாரிய ஸ்வாமிகளுடையது.

தென்னிந்தியாவிலுள்ள பிரசித்த ஆசார்ய புருஷர்களான கோடி கன்னிகாதானம் தாதாசார்ய வம்சத்தில், காலம் வகுக்க முடியாமல் பலப் பல பரம்பரைகளாக இடைவிடாமல் வேதம், யக்ஞம் இவைகளை அனுஷ்டித்துப் பரிபாலித்து வரும் ஸ்ரீ வைஷ்ணவ குடும்பத்தில் பிறந்தவர் ஸ்ரீ அக்னிஹோத்ரம் தாததேசிக தாதாசாரிய ஸ்வாமி. இவர் சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளாக இடைவிடாமல் அக்னிஹோத்ரத்தைச் செய்து வந்த ஸுப்ரஸித்த ஸ்ரீ பட்டுஸ்வாமிகள் (ஸ்ரீ ஸ்ரீநிவாஸ தாதாசார்) என்பவரின் சகோதரர். வைதிக முறைப்படி வேதம், வேத லக்ஷணம் முதலியவைகளைச் சாங்கோபாங்கமாகக் கற்ற பிறகு வேத பாஷ்யம், ச்ரௌதம், மீமாம்ஸை, விசிஷ்டாத்வைதம் இவைகளில் ஆழ்ந்த பாண்டித்தியம் பெற்றார். காசி முதல் கன்னியாகுமரி வரை பல பாகங்களில் நடைபெற்ற வித்வத் பரிஷத்துகளில் கலந்து கொண்டு சம்ஸ்தானாதிபதிகளால் கௌரவிக்கப்பட்டார். வாதப் பிரதிவாதம் செய்து அதில் ஒரு தெளிவு காட்டும் அபாரமான சக்தி இவருக்கு உண்டு. தாம் பெற்ற வித்யைகளை மும்மதஸ்தர்களுக்கும் அளித்திருக்கிறார். தம்மை அணுகியோருக்கு வைதிக—விசிஷ்டாத்வைத போதனைகளை வித்யாதானமாக இப்பொழுதும் வாரி வழங்கி வருகிறார். அவர் ஆன்மீக உலகுக்கு அளித்துள்ள பெரும் செல்வம் அன்னாரின் புதல்வராகிய அக்னிஹோத்திரம் ஸ்ரீ ராமானுஜ தாதாசாரியர் என்றே கூறலாம்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் ஸ்ரீ தாதாசாரிய ஸ்வாமியின் பாண்டித்தியத்தைக் கௌரவித்துப் பல சன்மானங்கள் வழங்கி இருக்கிறார்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள், தாமே யக்ஞங்கள் செய்து மும்மதஸ்தர்களில் யார் யாகம் செய்தாலும் அதில் பங்கு கொள்வார். பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதரின் பிதாவான பிரம்மஸ்ரீ ஸுப்ரமண்ய தீக்ஷிதர் பரம்பரைக்கும் ஸ்ரீ ஸ்வாமிக்கும் நீண்ட காலமாக நெருங்கிய பந்தமுண்டு. மஹா வித்வான்கள் ஸ்ரீ ஸ்வாமிகளோடு வேத வேதாந்தங்களைப் பற்றி விசாரம் செய்து ரஸித்து சந்தோஷிப்பார்கள்.

பிரதி தினமும் தாம் செய்து வரும் அக்னிஹோத்ரத்தை முடிக்கும்போது யக்ஞேச்வரனிடம் லோக க்ஷேமத்துக்காகவும், எல்லா மக்களிடமும் கடவுள் பக்தி செழித்தோங்க வேண்டும் என்றும் பிரார்த்திப்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் தம் கடமைகளில் ஒன்றாகக் கருதுகிறார்.

இந்த வேதச் செல்வரின் ''சதாபிஷேகம்' இம்மாதம் 23ந்தேதி நிகழ்கிறது. பன்னெடுங் காலமாக மறைகளின் மரபுக்கு

ஓர் அணிகலனாக விளங்கும் அவருக்கு நம் அஞ்சலியை அளித்து, அவர் மேலும் பல காலம் தமது திருப்பணியைத் தொடர்ந்து வரப் பிரார்த்திக்கிறோம்.

சதாபிஷேகத்தை மிகவும் பொருத்தமான முறையில் கொண்டாடத் திட்டமிட்டிருக்கிறார்கள். வேதவித்தின் சதாபிஷேகம் வேத விழாவாகவே நடக்கிறது.

சதாபிஷேகத்தை யொட்டிக் குடந்தையில் வேத வித்துவான்களின் மகாநாடு நடக்கிறது. இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் வேத விற்பன்னர்கள் கூடுகிறார்கள். பிப்ரவரி 17ந் தேதி முதல் எல்லா வேதங்களின் எல்லா சாகைகளும் பாராயணம் செய்யப்படும். 20, 21, 22 தேதிகளில் வேதப்பண்பாட்டை விளக்க மகாநாடு நடைபெறுகிறது. வேதக் கருத்துக்களை மக்களுக்கு விளக்கும் அரிய கண்காட்சியும் நடைபெறுகிறது. ஆஸ்திகர்கள் யாவரும் மகாநாட்டில் கலந்துகொள்ளக் கேட்டுக் கொள்கிறோம்.

# என்ன சேதி?

## 'தத்துவமே பேசுங்கள்!'

ராஷ்டிரபதியவர்கள் சர்ச்சைக்கு அப்பாற்பட்டவர் என்று அரசியல் சாஸனம் மதிக்கிறது. 'அவரைக் குறித்து சர்ச்சை கூடாது' என்பதிலேயே 'அவர் சர்ச்சைக்குரிய விஷயங்களில் ஈடுபடலாகாது' என்பதும் தொக்கி நிற்கிறது. துரதிருஷ்டவசமாக நமது ராஷ்டிரபதியவர்கள் சர்ச்சைக்குரிய ஒரு விஷயத்தில் இறங்கிவிட்டதால் நாமும் அவரைப் பற்றிச் சர்ச்சை செய்ய வேண்டியுள்ளது. சட்டக் கருத்துக்களை நன்கறிந்த ஸ்ரீ ஸ்ரீபிரகாசாவே ராஷ்டிரபதியைப் பற்றிச் சர்ச்சை செய்துவிட்டபின் நாம் ஏன் தயங்கவேண்டும்?

உணவுப் பிரச்னைக்குக் காரணம் தீவிரமான நிலச் சீர்திருத்தங்களை விரைவில் நிறைவேற்றுவதுதான் என்று கருதும் ராஷ்டிரபதியவர்கள் 'இன்னமும் நிலச் சொந்தக்காரர்கள் என்று சிலர் இருக்கிறார்களே' என்று தமது வர்தா பேச்சில் குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். உணவுப் பிரச்னைக்குக் காரணமே இதுவரை செய்துள்ள நிலச் 'சீர்திருத்தங்கள்'தான் என்பது விஷயமறிந்த யாவரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. அவ்வாறெனில், டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களுக்கு விஷயம் தெரியாதா? பேஷாகத் தெரியும். ஆதி சங்கரர், பிராட்லி, காண்ட், ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் ஆகியோர் கூறும் நுண்ணிய விஷயங்கள் அவருக்குத் தெரியும். ஆனால் சித்தாந்தங்கள் வேறு; சாமானிய மானுட இயல்புக்கு ஏற்ற நடைமுறைக் கொள்கைகள் வேறல்லவா? எனவே ராஷ்டிரபதியவர்கள் நடைமுறை நிலவரங்களைப் பற்றிப் பேசாமல் தாம் அறிந்த பரம தத்துவங்களை மட்டும் உபதேசித்துக் கொண்டிருந்தாலே ஸௌக்கியமாயிருக்கும்.

## போய்ச் சேர்ந்தார்!

ஸ்ரீமான் பிரேன் மித்ரா அவர்கள் ராஜிநாமா செய்ததில் குறிப்பிடத்தக்க அம்சம் எதுவும் இல்லை. இவ்வளவு காலமாக அவர் ராஜிநாமா செய்யாததுதான் குறிப்பிடத்தக்கது. ஆனால் சட்டரீதியாக அதிலும் ஒன்றும் தவறு சொல்வதற்கில்லை. தவறெல்லாம் அவர் இவ்வளவு ஊழல்கள் செய்யக் காரணமாயுள்ள சலுகை ஆட்சி முறையில்தான் உள்ளது. ஒரு பிரேன் மித்ரா போவதில் மட்டும் புண்ணியமில்லை. நிர்வாகத் தூய்மை வேண்டுமெனில் பெர்மிட் - லைசென்ஸ் சலுகை முறையும், அதன் சிருஷ்டிகர்த்தாவான காங்கிரஸ் ஆட்சியுமே ஒழிய வேண்டும்.

## ராமனும் முருகனும்

ஸ்ரீராமன் முருகன் இருவரையுமே கலியுக வரதன் எனக் கூறுவதுண்டு. எனவே ஸ்ரீ சீதாராமனைப் பிரதிஷ்டை செய்து ஆராதித்து வருகிற பம்பாய் ஆஸ்திக சமாஜத்தில் ஸ்ரீ வள்ளி தேவயானையுடன் ஸ்ரீ முருகனுடைய விக்ரகமும் பிரதிஷ்டையாகவிருப்பது மிகவும் பொருத்தம். மார்ச் 22-ந் தேதி பிரதிஷ்டை நடக்கிறது. இதையொட்டி இம்மாதம் 22-ந் தேதியிலிருந்து நாற்பது நாட்களுக்கு சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரவர்கள் பம்பாயில் மகாபாரத உபந்நியாசம் நிகழ்த்துகிறார்கள்.

உபந்நியாசப் பூர்த்தியைத் தொடர்ந்து ஏப்ரல் இரண்டாந் தேதியிலிருந்து தினந்தோறும் 50 ருத்விக்குகளைக் கொண்டு பற்பல அற்புதமான ஹோமங்களும் பாராயணங்களும் நடக்கவிருக்கின்றன. ஏப்ரல் பத்தாம் தேதி ஸ்ரீ ஸீதாராம ஸாம்ராஜ்யாபிஷேகத்துடன் விழா பூர்த்தியாகிறது. இந்தத் தர்மத்துக்கு உதவி செய்பவர்கள், **வி. கே. மூர்த்தி அய்யர், காரியதரிசி, ஆஸ்திக சமாஜம், மாதுங்கா, பம்பாய்-19** என்ற விலாசத்துக்குப் பொருள் அனுப்பவேணும்.

## கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்

சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆண்டுதோறும், பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவுச் சொற்பொழிவுகள் நடந்து வருவது தமிழுலகம் நன்கறியும். இவ்வாண்டு அந்நினைவுச் சொற்பொழிவுகளைச் சென்னை பச்சையப்பன் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் திரு அ. மு. பரமசிவானந்தம் எம்.ஏ.எம்.லிட். அவர்கள் நடத்துகிறார்கள். ''19வது நூற்றாண்டில் தமிழ் உரை நடை வளர்ச்சி'' என்னும் பொருள்பற்றி இம்மாதம் 15, 16, 17ம் தேதிகளில் சென்னை பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவுகள் நிகழவிருக்கின்றன. தமிழிலக்கிய ஆராய்ச்சியிலும் வளர்ச்சியிலும் ஈடுபாடு கொண்டவர்களுக்கு இம் மூன்று நாள் உரைகளும் அரிய இலக்கிய விருந்தாக இருக்கும்!



# ராஜாஜியின் கருத்துக்கள்

திரு காமராஜ் அவர்கள், என்னைப் பற்றி ஒரு ஆதாரமற்ற குற்றச்சாட்டு செய்திருக்கிறார். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நான் சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக இருந்தபோது பள்ளிக்கூடங்களில் ஹிந்தி பாடம் வைத்தேன். இதை மதுரை சோமசுந்தர பாரதியார் அவர்கள் எதிர்த்தார். 'தம்முடைய மாப்பிள்ளையாகிய ஸ்ரீ எஸ். கிருஷ்ணசுவாமி பாரதியவர்களுக்கு நான் மந்திரி பதவி கொடுக்காததால் தான் சோமசுந்தர பாரதியார் என் ஹிந்தித் திட்டத்தை எதிர்க்கிறார்' என்று நான் குற்றம் சாட்டியதாக திரு காமராஜ் அவர்கள் முதல்தர அவதூறு கூற்று ஒன்று கூறியிருக்கிறார். இது ஆதாரமற்ற பேச்சு என்று எனக்குத் தெரிந்திருந்தபோதிலும் என்னுடைய ஞாபக சக்தியை மட்டும் நம்பினால் போதாது என்று கருதி, ஸ்ரீ கிருஷ்ணசுவாமி பாரதிக்கே எழுதி, 'நான் இதுபோல் எப்போதேனும் குற்றம் சாட்டியதுண்டா?' என்று கேட்டேன். அவருடைய பதில் வருமாறு:

''என் மாமனுருக்கு இவ்வாறு நோக்கம் கற்பித்துத் தாங்கள் ஒரு போதும் பேசியதில்லை என்று நான் திட்டவட்டமாக உறுதி கூறுகிறேன். தாங்கள் கூறியதாகச் சொல்லப்படுவது எவ்வித ஆதாரமுமற்ற பொய் என்று தாங்கள் மறுப்புத் தெரிவிக்கலாம்.''

❖ ❖ ❖

சட்டவிரோதமாகக் கூடுபவர்களைக் கலைப்பதற்காகப் போலீஸ் பலத்தைப் பிரயோகிக்கலாம் என அரசாங்கத்துக்குச் சட்டபூர்வமாக அதிகாரம் உள்ளது. கூட்டத்தைக் கலைப்பதற்கு மட்டுமே உள்ள அதிகாரம் இது. ஆனால் விசாரணையில்லாமல் ஸ்தலத்திலேயே தடியடி தண்டனை தருவதற்கு இது ஓர் ஆயுதம் என்று கோபமுற்ற முதன்மந்திரிகளும், போலீஸ் அதிகாரிகளும் கருதத் தொடங்கி விட்டனர். இது சட்டவிரோதமான கருத்து; அதருமமான அதிகார துஷ்பிரயோகமுமாகும்.

❖ ❖ ❖

ராணுவ போதனையில் அடிகு தற்கொண்டு ஹிந்தி மூலமே படிப்பு அளித்து வருவதைப் பத்திரிகைச் செய்திகள் விளக்குகின்றன. சில மாதங்களுக்கு முன் எனக்குச் சில தென் இந்திய ராணுவ சிப்பந்திகள் இலக்ஷியமாக மிகவும் உணர்ச்சியுடனும் மனக்கசப்புடனும் எழுதி யிருந்தனர். அந்தக் கடிதங்களை நான் பாதுகாப்பு மந்திரிக்கு அனுப்பி வைத்தேன். ஹிந்தி தெரியாத ராணுவ சிப்பாய்களுக்கு ஹிந்தியிலேயே நிர்ப்பந்த போதனை தருவதால் அவர்களுக்குப் பல பிரதிகூலங்கள் ஏற்படுகின்றன. அதோடு இந்தத் திட்டம் நிற்கவில்லை. அவர்களுடைய தேசப்பற்று, பிரஜா உரிமை இவற்றையும், கீழ்மட்டத்தில் தள்ளுகிறது.

❖ ❖ ❖

ஹிந்தி அறியாதவர்களுக்கு அம்மொழியை அவர்கள் அறியும் வரை என்னென்ன சலுகைகள் தரலாம் என்பது பற்றிக் காங்கிரஸ் மேலிடத்தார் சுற்றி வளைத்து அறிக்கை விடுகிறார்கள். நம்முடைய ஹிந்தி அறியாமையை அவர்கள் கவனித்து அதற்கு நடவடிக்கை எடுக்கத் தேவையில்லை. நமது ஹிந்தி எதிர்ப்பையே கவனித்து அதன் நியாயத்தை உணர வேண்டும். பலகாலமாக சர்வதேச இணைப்பு மொழியாக நல்ல முறையில் எவ்வித பாரபட்சமுமின்றி உபயோகமாகிவரும் ஆங்கிலத்தை அகற்றி அதன் இடத்தில், வளர்ச்சியற்றதும் செயற்கையாக உருவாக்கியதுமான ஒரு பிரதேச மொழியை அமர்த்துவது தவறு.

❖ ❖ ❖

ஹிந்தியை ஆட்சிமொழியாக்கியது எவ்வளவு யோசனையற்ற திட்டமோ அதேபோல் யோசனையில்லாமல் இன்னொர் ஏற்பாடு உருவாகியுள்ளது. ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் 'கோட்டா' முறையில் மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கு நியமனம் தரவேண்டும் என்கிற யோசனை ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை வெறும் உத்தியோக வேட்டைப் பிரச்னையாகத் திரித்துக் காட்டுகிறது. ஹிந்தித் திட்டத்தால் தேசத்தின் ஐக்கிய உணர்ச்சிக்கு பங்கம் ஏற்படும் என்பதே எதிர்ப்புக்கு முக்கியமான காரணம்.

அகில இந்திய சர்வீஸ்கள் திறமையாகவும், ஒழுங்காகவும், நல்ல மரபுகளைப் பின்பற்றி அமைய வேண்டும். இன்னின்ன ராஜ்யத்துக்கு இத்தனை ஸ்தானங்கள் என்று பிரித்தால், ஒரு மொத்தமாகத் தரம் கட்டாயம் குன்றிப் போகும். வகுப்புவாரி அடிப்படையில் முன்பு சென்னையில் உத்தியோகம் தந்தபோது இப்படித்தான் தரம் குன்றிப் போயிற்று. மட்டரகப் பிரதேசங்களிலிருந்து வரும் மட்டதர அபேட்சகருக்கு உத்தியோகம் கிடைப்பதற்கு இது வழியாகும். சலுகைகள் தரவேண்டியிருக்கும். இதனால் அகில இந்திய சர்வீஸ்களின் தரம் குறைந்து போகும். எல்லோருக்கும் ஒரேபோல் பொதுவாகவும், சமமாகவும், அகில இந்திய கட்டுக்கோப்புடனும் மத்திய சர்வீஸ்கள் அமைக்கப்பட்டன. கோட்டா முறை வந்தால் அகில இந்திய கட்டுக்கோப்புக் குலைந்து உள்ளூர் அரசியல் சூழ்ச்சிகள் சர்க்கார் காரியாலயத்தில் பிரவேசிக்கும். கோட்டா முறையைச் சென்னை மாணவர்கள் விருவிருப்புடன் எதிர்த்தது மிகவும் சரி; சமாதான ஆசையிலும் சமரச எண்ணத்திலும் இதைச் சில பத்திரிகைகள் ஆதரித்தது தவறு.




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொருபாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர். 10031, பம்பாய்.




## COUPON

K.6

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................................

*Address* ..............................................

..............................................



## ராஜ்குமார்

தமிழ் நாட்டிலிருந்து ஹிந்திப் படம் ஒன்று வண்ணப் படமாக, 'ராஜ்குமார்' என்று பெயரோடு, இப்பொழுது வெளிவரும் ஹிந்திப் படங்களைப்போலவே, ஓர் இலட்சியமும் இல்லாமல் வெளிவந்திருக்கிறது. அதிலே சிறு பிராயத்திலேயே அயல் நாட்டுக்குப் படிக்கச் சென்ற இளவரசன் ஆகாய விமானத்தில் திரும்புகிறான். அவனுக்கு வரவேற்பு அளிக்கும்போது, விதூஷகன் போலவா? — ஒரு மறை கழன்றவன் போலவே நடந்து கொள்ளுகிறான்! பல வேஷங்கள் தரிக்கிறான். நாடோடி இனம் ஒன்றின் அரச குமாரியைக் காதலிக்கிறான். வில்லன், வில்லி, விற்போர், வாட்போர், துப்பாக்கி, ரிவால்வர் எல்லாம் இக் கதைக்கு உண்டு. கடைசியில் நல்லவன் வாழ்கிறான். இப்படி ஓர் அவியலைப் பார்க்கிறோம். அவியல் ருசியாயிருக்குமே என்று கூறுபவர்கள், நாலாந்தர ஹோட்டல்களில் 'ஸ்பெஷல்' என்று போடப்படும் அவியலைப் புசித்திருந்தால், முற்றல் வெண்டைக்காய், வரிச்சாணிக் கொத்தவரங்காய், சொத்தைக் கத்தரிக்காய்—இவைபோன்ற காய்கறிகளைக் கொண்டு புளித்த மோரையும் அழுகல் தேங்காயையும் அரைத்து விட்ட அவியலைச் சுவைத்திருந்தால், என்ன சொல்வார்கள்? அத்தகைய அவியல் கதை இது. மாஸ்டர் பப்லுவின் நடிப்பைத் தவிர மற்றவர்களின் நடிப்பு மனத்தில் நிற்கவில்லை. இசை பரவாயில்லை. பல இடங்களில் நேர்த்தியாக இருக்கிறது. ஆனால் மணம் கூட்டும் பெருங்காயத்தின் வாசனை தூக்கலாயிருந்துவிட்டால், அதுவும் சுவையற்ற சமையலில், எப்படி ருசித்துச் சாப்பிட முடியும்? படத்தைப் பாராமல் ரேடியோவில் ஒலிக்கும் நல்ல பாடல்களைக் கேட்டு, நுகர்ந்தால் போதும் என்றே தோன்றும்.

## யங் நன் (Young Nun)

சென்னையில் நடைபெற்ற திரைப்பட விழாவில் ஒரே நாளில் நாலு தியேட்டர்களில் பல நாட்டுப் படங்களைக் காண்பித்துத் திக்குமுக்காட வைத்துவிட்டனர்! ரசிகர்கள் டிபனை மூட்டை முடிச்சுகளாகக் கட்டி எடுத்துச் சென்று நான்கு வேளை ஆட்டத்தையும் விடாமல் பார்த்துக் களித்தனர். அவர்கள் ரசித்த நல்ல படங்களில் 'யங் நன்' — இளம் கன்னி — என்ற இத்தாலிப் படமும் ஒன்றாகும்.

நல்ல படங்களையே திரைப்பட விழாவுக்கு அனுப்பிப் புகழ்பெற்ற இத்தாலி நாட்டினர் அந்தப் புகழுக்கு ஏற்றம் அளிக்கும் வகையில் இந்தப் படத்தைத் தயாரித்திருக்கிறார்கள்.

நாற்பது வயதான அன்டோனியோ சிறிது கேளிக்கை வாழ்வில் ஈடுபட்டு வாழ்வின் இன்பத்தை நுகர்ந்தவன்தான். அவனுக்கும், இருபது வயதேயான — தொண்டு வாழ்க்கை மேற்கொண்டு கன்னிமாடத்தில் வாழ்ந்து நோயாளிகளுக்குப் பணிவிடை புரியும் கன்னியொருத்திக்கும் எப்படியோ பரிசுத்தமான காதல் மலர்கிறது. இந்தத் தூய காதலுக்காக எதையும் தியாகம் செய்யச் சித்தமாகி, வாழ்க்கையை மாற்றிக் கொண்டு விட்டான் அன்டோனியோ. ஆனால் அவள் அவனுக்குக் கிடைத்தாளா?

கன்னி மாடத்தைச் சேர்ந்த ஓர் இளம் பெண்ணைப் பற்றிக் காதல் கதை புனைவது நெருப்புடன் விளையாடுவது போன்ற காரியமல்லவா? அப்படி விளையாடிக் கையைக் கட்டுக்கொள்ளாமல் தப்பி விருப்பதுதான் படத்தின் சிறப்புக்கும் டைரக்டரின் திறமைக்கும் சான்று. மிக அற்புதமான படம், போங்களேன்!



## படாஸியில் பீரங்கிகள் (Guns at Batasi)

கத்திச் சண்டையும் குதிரையோட்டமும் வைத்துப் படமெடுப்பது ஒருவகை. காதல் ஆட்டம், சோகப் பாட்டு, இறுதியில் கல்யாணம் என்று திரைப்படங்கள் தயாரிப்பது ஒரு விதம். துப்பாக்கி, கொலை, துப்பறிதல், என்ற ரீதியில் செல்லும் படங்கள் ஒருபுறம். இந்த வழக்கமான 'சினிமா ஒழுக்க விதி'களை மீறி இன்னொரு விதமாகவும் படமெடுக்கலாம். அது ஒரு கதாநாயகனை மையப்புள்ளியாக வைத்து, அவனைச் சுற்றிலும் உருவாகும் நிகழ்ச்சிகளால் அவன் எந்த விதமாகப் பாதிக்கப்படுகிறான் என்பதை — அவன் குண இயல்புகளை — திரைச் சித்திரமாகத் தீட்டுவது. இதை ஒரு கதையாகத் தொடர்புபடுத்திக் காட்டுவது கடினமான காரியம்தான். அதைவிடப் பெரிய விஷயம், சிரம சாத்திய மான இந்தக் காரியத்தை மிக எளிதாகச் செய்து முடித்துவிட்டது போன்ற பிரமையைப் பார்ப்பவர் களின் உள்ளத்தில் ஏற்படுத்துவது. இந்த அற்புதத்தைத்தான் சாதித்திருக்கிறார்கள்.

சமீபத்தில் சுதந்திரம் பெற்ற ஆப்பிரிக்க நாடுகளுள் ஒன்றில் பழைமையான பிரிட்டிஷ் ராணுவ சம்பிரதாயங்களில் ஊறித் திளைத்த ஒரு தளபதியைப் படைத் தலைமை தாங்கச் சொல்லி யிருக்கிறார்கள் என்பது கதை. புதிய புரட்சிகரமான சூழ்நிலைகளுடன் அனுசரித்துப் போக முடியாமல் தவிக்கிற அவரது குணச்சித்திரம் ரிச்சர்டு அட்டன்பரோவின் உயர்ந்த நடிப்புத்திறனால் வெளிப்படுகிறது.

சர்வதேசப் பட விழாவில் பங்கு பற்றிய படங்களுள் இதுவும் ஒன்று. பட விழா நடத்தினால் போதாது. அதனால் நாம் படிப்பினை பெற்றுப் பயனுற வேண்டும். படாதிபதிகள்; ரசிகர்கள் உள்ளிட்ட நமது 'திரைப்பட நோக்கு' மாற வேண்டும்.



## அனுராதா

'சாகரிகா' என்ற வங்காளக் கதையைத் தெலுங்கிலே பல வருஷங்களுக்கு முன் அனுராதா வாகப் படமாக்கி யிருக்கிறார்கள். அவள் இன்று தமிழ் பேசுகிறாள். 'டப்பிங்' யுகம் மறைந்து மவுசு குன்றிப் போன இந்தச் சமயத்தில் இதற்கு எத்தகைய வரவேற்பு இருக்குமென்று சொல்லவா வேண்டும்? அனுராதா கதையின் பிற்பகுதி 'பாலும் பழமும்' கதையின் பிற்பகுதியை நினைவுபடுத்துகிறது. ஏதோ கதையம்சம் இருந்தாலும் அதை அளித்திருக்கும் முறையும் நடித்திருப்பவர்களின் திறமைக் குறைவும் சேர்ந்து நமக்கு அலுப்பையே தருகின்றன. நடிகையர் திலகம் சாவித்திரி ஒருவரிடம்தான் உணர்ச்சிகள், நடிப்பு ஆகியவற்றைக் காண முடிகிறது. நாகேஸ்வர ராவ் உடலையும் உருவத்தையும் எப்படி ஒரே நிலையில் வைத்திருக்கிறாரோ அப்படியே தமது உழைப்பையும் நடிப்பையும் காப்பாற்றி வருகிறார். உணர்ச்சிகளைக் கொட்டவேண்டிய இடங்களில் எங்கே அது சிதறி வீணாகிவிடுமோ என்று மிக ஜாக்கிர தையாக இருக்கிறார். முன்னேற்றத்தை எதிர்பார்க்க முடியாத மற்றொரு நடிகர் ரேலங்கி. ஆந்திர நாட்டின் ஈடு இணையற்ற(?) ஹாஸ்ய நடிகரின் சேஷ்டைகளைக் காணும்போது அலுப்புத்தான் ஏற்படு கிறது. நடிப்பில் வளர்ச்சியும், மலர்ச்சியும் இல்லாவிட்டாலும் உடல் வளர்ச்சியில் முன்னேற்றம் கண்டிருக்கிறார் ரேலங்கி. ஒளிப்பதிவு தரமாக இருக்கிறது. பாடல்கள் எதுவும் மனத்தில் படவில்லை. உணர்ச்சிகள் குமுறி வெளிப்பட வேண்டிய கட்டங்களில் பொம்மைகளாகச் செயல்படும் நடிகர்களையும் அசட்டு ஹாஸ்யக் கூத்தையும் கொண்ட அனுராதா மொத்தத்தில் அலுப்புத் தரும் படம். அதனால் தானோ என்னவோ தயாரிப்பாளர்களும் இதற்கு அதிக விளம்பரம் செய்து பணத்தை வீணாக்கவில்லை.



# குடியரசு தினம்: இரு காட்சிகள்!

**வ**ழக்கமான சம்பிரதாயப்படி அரசினரின் ஆதரவுடன் குடியரசு தினத்தன்று ராணுவ அணிவகுப்பு என்னும் சடங்கு நடந்தேறியது. ஆனால் அதே தினம்தான் ஹிந்தித் திணிப்பை எதிர்த்து மக்களின் எழுச்சி உருவான திருநாளாகவும் விளங்கியது.

குறிப்பாக மாணவர்கள் தங்கள் எதிர்காலம் பாதிக்கப்படுவதை உணர்ந்து எந்த அரசியல் கட்சியின் தூண்டுதலுமின்றித் தங்கள் எதிர்ப்பை நியாயமான முறையில் தெரிவித்துக் கொண்டார்கள். இதன் பிறகும் ஆட்சியாளரின் கண் திறக்கவில்லை யென்றால் அது பிளவுபட்டு வரும் பாரத நாட்டின் துரதிருஷ்டமின்றி வேறென்ன?

ஒரு சில உயிர்கள் பலியானதாலும் பலர் தடியடி பட்டதாலும் நூற்றுக்கணக்கானோர் சிறை வாசம் அனுபவித்ததாலும் எதிர்ப்பு மடிந்து விடப் போவதில்லை. பசப்பு வார்த்தைகளில் மக்கள் இனி மயங்கிவிடப் போவதில்லை.

மேல் படம்: ''ஆல் இந்தியா பிரஸ் போட்டோ ஏஜென்ஸி''

மற்ற படங்கள்: ''தினத் தந்தி''

< பூட்டிக் கிடக்கும் வீடுகள் . . . . . . .

ஔவை கூறினாள்: ''வீடு பெற நில்!''
நகர மாணவன் உரக்கப்படிக்கிறான்.

''அப்பா! குழந்தாய்! வீடு பெற நின்றால் நடக்காது. நடந்து சென்றாலும் போதாது: ஓட வேண்டும். தரகருக்கும் இரண்டு மாதம் தர வேண்டும். அப்பொழுதுதான் ஒருவேளை வீடு கிடைக்கலாம்!'' என்கிறார் தகப்பனார். வெய்யில் நிழல் பாராமல் நாயாக அலைந்து வீடு தேடியது அவருக்கல்லவா தெரியும்?

அதுவும் அவருக்குக் கிடைத்த வீடு எப்படிப்பட்டது என்கிறீர்கள்! இரண்டே அறைகள் கொண்டது! காற்றும் வெளிச்சமும் அவ்வறைகளுக்குள் புக அஞ்சும். அடுப்பு கக்கும் புகையோ அறைகளை விட்டு வெளியேறத் தயங்கும். இவ்வளவு இருந்தும் வீடு என்று ஒன்று கிடைத்ததே என்ற மகிழ்ச்சி அவருக்கு.

உண்ண உணவு, உடுக்க உடை, குடியிருப்புக்கு வீட்டு வசதி-இவை மூன்றும் தனது மக்களுக்குக் கிட்ட வேண்டும் என்று சுதந்திரம் பெற்ற நாளாகப் பாரதம் திட்டம் தீட்டி வருகிறது! வீட்டு வசதி போர்டு ஒன்று நிறுவி இக் காரியத்தில் முனைந்துள்ளது. எத்தனையோ பேர் இதனால் பயன் பெற்றிருக்கிறார்கள். சென்னை நகரசபையும் நகரத்தில் வாழும் மக்களுக்கு வீட்டு வசதி செய்து தர முனைந்துள்ளதை வரவேற்கவேண்டியதுதான்.

விளம்பரங்களைப் பார்த்து விண்ணப்பபாரங்கள் வாங்கச் செல்லும் எண்ணற்ற மக்கள் வீடு பெற 'கியூ'வில் நிற்கிறார்கள்! இந்தக் கூட்டத்தைப் பார்த்து 'இத்தனை பேருக்கும் எப்படி வீட்டு வசதி செய்து தர முடியும்?' என்று மலைக்கலாம். 'நாங்களென்ன நளனா, மயனா? நினைத்த மாத்திரத்தில் வீடுகளைச் சிருஷ்டிக்க?' என்று தயங்கலாம்!

இந்த மலைப்பும் தயக்கமும் புரியாமல் இல்லை! ஆனால் கட்டிப் போட்ட பல வீடுகள் வருஷக் கணக்கில் பூட்டிக் கிடக்கின்றனவே! வராந்தாவில் ஆடுகள் அழகாகக் குடித்தனம் நடத்துகின்றனவே! புழக்கடையில் பன்றிகள் புழங்குகின்றனவே! ஏன்? 'அங்கிங்கெனாதபடி' வியாபித்திருக்கும் சிவப்புநாடா முறை மட்டும்தானா காரணம்? அல்லது உள்ளுறைப் பொருளாக வேறு ஒரு பொருள் புரையோடியிருப்பதுவோ? பார்க்கப்போனால், கேட்கப்போனால் ஆயிரம், இரண்டாயிரம் என்று பேச்சு அடிபடுகிறது!

'அப்படியில்லை, விளக்குகள், குழாய்கள் போன்ற வசதிகள் இன்னும் வரவில்லை. காரணம் அதுதான்' என்று அதிகாரிகள் சொல்லி மழுப்பலாம். இந்த வசதிகளைச் செய்து தரக்கூடிய சக்தி வாய்ந்த நகரசபை, தான் கட்டிய வீடுகளுக்குச் சீக்கிரமாக இவ்வசதிகளைச் செய்து தர முடியாதா? முடியும். முடியாததற்குக் காரணம், பேரம் முடியவில்லை என்கிறார் அனுபவப்பட்ட ஒருவர்.

மக்கள் வீட்டுக்கு அவதிப்படும் வேளையில் பூட்டி வைத்திருக்கும் வீடுகளை நியாயம் என்னும் நேர்த் தராசில் நின்று ஒதுக்கினால் வீடு பெற நிற்பவர்கள் வாழ்த்துவார்கள். 'வீடு பெற நில். கட்டாயம் உன் முறையும் வரும்.' — இப்படிச் சொல்ல நேர்மையும் நாணயமும் தேவை.

V மூன்றே அறைகளில் வாழும் மூன்று குடும்பங்கள் . . . . . . .



# கொடி உடலாள்
# துடி இடையாள்

ஸ்லாக்கோ, புடவையோ, எது அணிந்தாலும் எடுப்புடன் தோன்றும் இந்த எழிலரசியின் தன்னம்பிக்கைக்கு அடிப்படை கொடிபோல் துவளும் ஒயிலான உருவம்தான்!

முயன்றால் எந்தப் பெண்ணும் பெறக்கூடிய பாக்கியம்தான் இது. லிமிகால், அபாயமற்ற முறையில் இளைத்து, ஆரோக்கியமாக, அழகுடன் திகழ வழி காட்டுகிறது.

லிமிகால், உடலுக்கு அத்தியாவசியமான போஷாக்குச் சத்துக்கள் கொண்ட பரிபூர்ண மரக்கறி உணவு. ஒரு வேளை லிமிகால் (4 மேசைக் கரண்டி பவுடர் அல்லது 6 பிஸ்கட்டுகள்) பசியைச் சமனம் செய்யவல்ல ஒரு முழுச் சாப்பாட்டுக்குச் சமமானது; ஆனால் குறைந்த கலோரிகள் கொண்டது. பரீட்சார்த்தமாக லிமிகால் சாப்பிட்டுப் பார்த்ததில் ஒரு வாரத்திற்கு 3லிருந்து 4 பவுண்டுகள் வரை எடை குறைந்திருக்கிறது.

லிமிகால் பவுடர் சாக்கலேட், வாழைப்பழம், ஆரஞ்சு ஆகிய மூன்று இன்சுவைகளில், 225 கிராம்கள், 1.6 கிலோகிராம் ஆகிய இரு சைஸ் டின்களில் கிடைக்கிறது.






லிமிகால் பிஸ்கட்டுகள் 27 கொண்ட (900 கலோரிகள்) டின்னில் கிடைக்கின்றன.

எடை குறைந்து எடுப்பாய் விளங்க லிமிகால் — போஷாக்குள்ள பரிபூர்ண பதிலுணவு

ஸாராபாய் கெமிகல்ஸ்
தபால் பெட்டி 1688, பம்பாய் – 1.

Shilpi SC 137 TM

# செய்திப் படங்கள்



1. கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம் சமீபத்தில் சென்னை முதன் மந்திரிக்கு வரவேற்பளித்துக் கௌரவித்தது. 2. சென்னையிலிருந்து அமெரிக்கா செல்லும் அமெரிக்கச் செய்தித் துறை அதிகாரி வில்லியம் வில்காக்ஸ், 'கல்வி' ஸ்தாபனத்தார் அளித்த அன்பளிப்பான விநாயகர் பெருமானைப் பார்த்து வியக்கிறார். 3. நக்கீரர் கழகத்தின் இருபத்தி நான்காவது தமிழ் விழாவுக்குத் தலைமை வகித்த டாக்டர் ஏ. வி. செட்டியார் ஆசிரியர்களுக்குப் பரிசுகள் வழங்குகிறார். 4. மேற்கு ஜெர்மனியில் டஸ்ஸல்டார்ப் நகர பொருட்காட்சியில் உள்ள உலகத்திலேயே மிகப் பெரிய முட்டையின் தோற்றம்.









# நியூயார்க் முதல்

இளம் குற்றவாளிகளை விசாரிக்கும் ஒரு நீதி ஸ்தலத்துக்குப் பார்வையாளராகப் போயிருந்தார் அவர், பிலெடல்பியா நகரில். பதினெட்டு வயதுப் பையன் ஒருவன் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் வருவதில்லை என்ற குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்ல வந்திருந்தான். ''வீட்டில், தாயார், தகப்பனார், எல்லோருமே அவரவர்கள் தங்கள் வேலைக்கு விரைந்து சென்று விடுகிறார்கள். எனக்கு உற்சாகமோ ஊக்கமோ அளித்துப் பள்ளிக்குப் போகச் செய்ய அங்கு யாருமே இல்லாததுதான் நான் மட்டம் போட்டதற்குக் காரணம்'' என்று பதிலளித்தானும் அந்தப் பையன். சிந்தனையைத் தோற்றுவிக்கும் பதில்தானே?

அமெரிக்க சமூகத்தில் குறிப்பாக மாதர் நலம் பேணுதல் பற்றிய விவரங்களை நேரடியாகத் தெரிந்துகொள்ளச் சமீபத்தில் சிறந்த வாய்ப்புப் பெற்ற ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் சராசரி அமெரிக்கக் குடும்ப வாழ்க்கையைப் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ச்சி பூர்வமாகவே அறிந்து வந்திருக்கிறார் என்றுதான் அவர் பேச்சிலிருந்து ஊகிக்கத் தோன்றுகிறது.

இரண்டு மாத காலத்தில், அந்த நாட்டின் கிழக்குக் கரையிலிருந்து மேற்குக்கரை வரை, அதாவது, நியூயார்க்கிலிருந்து சான் பிரான்ஸிஸ்கோ வரை, பதினைந்து மாகாணங்களில் உள்ள பல ஊர்களுக்கும் விஜயம் செய்திருக்கும் இவர் சொன்ன பல விஷயங்கள் சுவாரசியமாக இருந்தன.

''அசுர வேகத்தில் கடிகாரத்தின் விநாடி முள்ளுடன் போட்டி போட்டுக் கொண்டு கம்பீரமாக இயங்கும் அமெரிக்கக் குடும்பங்களில், பந்தம், பாசம், உறவு என்ற சொற்களுக்கோ அதன் பொருளுக்கோ அதிக இடம் இல்லை: குழந்தைகள்கூடத் தனித் தனி இயந்திரங்களாக, அடுத்தவரின் கவனத்தை எதிர்பார்க்காத வகையில்தான் இயங்குகிறார்கள். இன்று உலகத்தில் மிக அதிகமான வேக வாழ்க்கை நடத்துபவர்கள் அமெரிக்கர்கள்



.....பாரதத்திலிருந்து வந்தவர்களைப் பார்த்ததும் அந்த அம்மையார் தாமும் அவர்களைப் போல் புடவை உடுத்திக் கொள்ள ஆசைப் பட்டார். விருந்தினர்களே உதவி செய்தார்கள். அத்துடன் நிற்காமல் உதட்டுச் சாயத்தின் உதவி கொண்டு நெற்றியில் திலகமும் இட்டார்கள்!...





# ஹானலுலு வரை

மேல்படம்: ஹவாயிலுள்ள வைகிகி கடற்கரையில் அயல்நாட்டினர் பொழுது போக்கி மகிழும் குதூகலக் காட்சி. முதல் பக்கப் படம்: இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்குச் சென்றிருந்த ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன், ஸ்ரீமதி அனந்தநாயகி, ஸ்ரீமதி சந்திர பாலகிருஷ்ணன் ஆகியோரை வாஷிங்டனிலுள்ள 'வாய்ஸ் ஆப் அமெரிக்கா'வைச் சேர்ந்த திரு பென்னராஜ் பேட்டி கண்டபோது எடுத்த படம்.

தான்'' என்று ஆரம்பித்த ஸ்ரீமதி வரதப்பன் அதற்கான விளக்கத்தைத் தாம் கண்டறிந்த அனுபவங்கள் மூலமே விளக்கினார்.

வேகத்துக்கு அடிமையான பெற்றோர்கள், தங்கள் கருவிலேயே தங்கள் குழந்தைகளும் வேக வாழ்க்கையில் ஈடுபட வேண்டும் என்றுதான் விரும்புகிறார்கள். ஒரு குழந்தை சற்று நிதானமாகவோ, ஒரு தடவைக்கு இரு தடவையாக ஏதாவது விஷயத்தைச் சிந்திக்க ஆரம்பித்தாலோ, 'ஐயோ! இந்தக் குழந்தை என்னவோ போல் இருக்கிறதே! மன வளர்ச்சிக் குறைவோ என்னவோ' என்று பயந்து நடுங்கி உடனே 'சைக்காட்ரிஸ்ட்' என்று அழைக்கப்படும் மனோதத்துவ வைத்தியரிடம் அழைத்துப் போகிறார்கள். அமெரிக்காவில்தான், உடல் நோய்களுக்கான வைத்தியர்களைவிட இந்த மாதிரி 'உள்ள நோய்களுக்கான' நிபுணர்கள் அதிகம். அவர்களுக்கு வரும்படியும் அமோகம். படுவேகமான இயந்திர வாழ்க்கை, நரம்புகளைப் பாதித்துத் 'தென்புத் தொய்வை' ஏற்படுத்தும் போது அவர்கள் 'சைக்காட்ரிஸ்ட்' சந்நிதானத்துக்குத்தான் ஓடுகிறார்கள். ஆத்ம விசாரணை செய்து கொள்ளக்கூட அவர்களுக்கு அவகாசம் கிடையாது.

இந்த வேகத்தை எட்ட முடியாத குழந்தைகள் போல, வேகச் சுழலில் சென்று வயோதிகத்தின் காரணமாகப் பின்தங்கிய முதியவர்களும் நிறைய இருக்கிறார்கள்.

'சன்ஷைன் விட்டு' என்ற ஊரில் முதியோர்களுக்கான இல்லம் ஒன்று இருக்கிறது. எழுபது வயதுக்கு மேற்பட்ட ஆண்களும் பெண்களுமாக ஆயிரத்து இருநூறு பேர்களுக்கு மேல் இங்கு தங்கித் தங்கள் எஞ்சிய வாழ்நாட்களைக் கழிக்கிறார்கள். இந்த இல்லம் ஒரு 'சர்ச்' நிர்வாகத்தின் கீழ்

இயங்குகிறது. முதியவர்களை இங்குகொண்டு சேர்த்த பிறகு அவர்களின் உறவினர்களில் பெரும்பாலோர் பணம் அனுப்ப ஏற்பாடு செய்கிறார்களே தவிர திரும்பி வந்து பார்த்துப் போகும் வழக்கத்தைக் கடைப் பிடிப்பதில்லை. இங்கு தங்கியிருக்கும் முதியவர்கள் வசதி யாக வாழ்கிறார்கள். தங்களுக்குத் தெரிந்த கைத்தொழில்களைக் காசாக்கவும் வாய்ப் பிருக்கிறது.. ஆனாலும் அவர்கள் அன்புக்காக ஏங்குபவர்களாகத்தான் காணப்படுகிறார்கள். தங்களுக்கு நெருங்கியவர்கள் என்று சொல் லிக் கொள்ள முடியாத ஒரு வட்டத்தில் அவர்கள் பற்றற்று வளைய வந்து கொண் டிருப்பதால், யாரும் புதிதாக அங்கு வந்தால் அவர்கள் மேல் தங்கள் அன்பைப் பொழிய அவர்கள் தயங்குவதில்லை.

அங்கிருந்த ஒரு மூதாட்டி, ஸ்ரீமதி வரதப்பனைக் கண்டதும் அன்பு பொங்க, தம் பேத்தியைக் கண்டதுபோல அரவணைத் துக் கொண்டு வெகு நேரம் பேசிக் கொண் டிருந்தாராம்.

குடும்பத்தில் காண்பிக்காத பற்று, பாசம் முதலியவற்றை அமெரிக்கர்கள் தங்கள் உழைப்பில் காண்பிக்கிறார்கள் என் றால் அது மிகையாகாது. அவர்களுக்கு உழைப்பே தெய்வம். இதில் ஆண்களுக்கு நிகராக, ஏன், அதிக அளவிலேயே பெண்களும் ஆர்வம் காட்டுகிறார்கள். டிபன் நேரத்தில்கூடப் பெரும்பாலான அமெரிக் கர்கள் 'சாண்ட்விச்' எனப்படும் தின்பண் டத்தைத் தங்கள் காரியாலய மேஜை மீதே வைத்து வாயில் போட்டுக் கொண்டு வேலை யையும் கவனிக்கிறார்கள். அத்தனைக்கத்தனை இரவுகளில், விடுதிகளிலோ, ஹோட்டல் களிலோ நிதானமாக, ஸ்வைரமாகச் சாப் பிடுகிறார்கள்.

காரியாலயங்கள், தொழிற்சாலைகள் முத லியவற்றைச் சுத்தம் செய்யும் தொழி லாளிகள் மாலை நேரத்தில் வேலை முடிந்ததும் வந்து தங்கள் பணியைச் செய்து போகி றார்கள். மறு நாள் வேலைக்குக் காரியாலயம் அப்போதே தயாராகி விடுகிறது.

உழைப்புக்கு மதிப்புக் கொடுக்கும் நாடாகையால் தாங்கள் இன்ன வேலைதான் பார்க்க முடியும். அந்த வேலை நம் தரத்துக்கு உகந்ததில்லை என்ற வரையறையோ போலி மனப்பான்மையோ அவர்களிடம் கிடையாது.

லாஸ் ஏஞ்சல்ஸ் நகருக்கு ஸ்ரீமதி வரதப் பன் சென்றிருந்தபோது அங்குள்ள ஃபிலோசா- பிகல் சங்கத்தில் தங்க நேர்ந்தது. இவர் போய்ச் சேர்ந்த தினத்தில் அங்குள்ள வேலைக் காரர்களுக்கு விடுமுறை தினம். விருந்தாளி தங்கும் விடுதியைச் சுத்தம் செய்து கொடுத் தாக வேண்டுமே! அந்தச் சங்கத்தின் தலைவர் தயங்கி நின்றுவிட வில்லை. ஓய்வில் வந் திருந்த தம் மகனையே அந்தப் பணியில் ஈடுபடுத்தினார். சும்மா இலவசமாகச் செய்யச் சொல்லவில்லை. கூலி பேசித்தான் செய்யச் சொன்னார். அந்த மகனும் மகிழ்ச்சியுடன் தன் பணியைச் செய்தான்.

ஐந்து நாட்கள் முழுவதும் உழைப்பைத் தொடர்ந்து சனி ஞாயிறு ஆகிய வார இறுதி நாட்களை அமெரிக்கர்கள் தங்களை மறந்து பக்கத்து ஊர்களுக்கோ, விளை யாட்டு மைதானங்களுக்கோ போய், களிப்பில் போக்கிக் கழிக்கிறார்கள். அந்த இரண்டு நாள் 'மெய் மறப்பு' அவர்களை அடுத்த ஐந்து நாட்கள் கடின உழைப்புக்குத் தயா ராக்கி விடுகிறது. உழைப்பு, ஓய்வு என்ற இரண்டுமே ஒன்றையொன்று தொடர்ந்து சக்கரம் போல் சுற்றுவதால் அவர்கள் இரண் டையுமே சம நிலையில் அனுபவிக்கிறார்கள்.

உழைப்பின் மதிப்பை வருங்கால சமூகத் தினர், மாணவர் நிலையிலேயே புரிந்து கொள் ளப் பல சர்வகலாசாலைகளும் வழி வகுத்துக் கொடுக்கின்றன.

கென்டகி மாகாணத்தில் உள்ள கிராம சர்வகலாசாலை ஒன்றுக்கு ஸ்ரீமதி வரதப்பன் போயிருந்தார். அங்கே சர்வகலாசாலை நிர்வாகமே மாணவர்கள் உபாத்தியாயர் களுக்காக ஓர் ஹோட்டல் நடத்துகிறது. கலாசாலை மாணவர்கள் ஒவ்வொருவரும் அந்த ஹோட்டலில் வாரத்துக்குப் பத்து மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்ற நியதியும் உண்டு. அந்த ஹோட்டலில் குறிப் பிடத்தக்க ஓர் அம்சம் என்னவென்றால், 'தயவு செய்து வேலை செய்பவர்களுக்கு இனாம் கொடுக்காதீர்கள்' என்னும் அறிவிப்புப் பலகைதான்!

நவநாகரிகமான அமெரிக்கக் குடும்ப வாழ்க்கையில் இப்போது 'இளம் வயதில்' கல்யாணம் என்பது ஓர் அடையாளமாகத் தோன்றியிருக்கிறது. கல்லூரிக்குள் படிக்க நுழையும் இளைஞன் கையோடு ஒரு கல் யாணத்தையும் பண்ணிக் கொள்கிறான். அவள் ஏதாவது ஒரு காரியாலயத்தில் பணி செய்து அந்த வருவாயைக் கொண்டு கணவனின் கல்லூரிச் செலவுகளைக் கவனித்துக் கொள் கிறாள். அவன் படிப்பு முடிந்து ஒரு வேலையை மேற்கொண்டதும், அவள் விரும்பினால் மேற் படிப்புக்குப் போகலாம். அப்போது கணவ னின் ஊதியம் உதவுகிறது. சிரமமில்லாமல், பெற்றவர்களுக்குப் பாரமாக இல்லாமல், இருவரும் கல்வி கற்று வசதி நிறைந்த வாழ்க்கை நடத்த இந்த முறை உபயோக மானதுதானே!

மாதர் நல சங்கங்கள் இங்கு நல்ல முறையி லேயே செயலாற்றுகின்றன. அவர்களிட மிருந்து நாம் கற்றுக் கொள்ளும்படியான புதுமை ஒன்றுமில்லை; ஏனென்றால், நம் இருவருடைய லட்சியங்களும் குறிக்கோள் களும் ஒன்றுதான். ஆனால் செயல் முறையில் தான் வித்தியாசம் தோன்றுகிறது. செல்வத் தில் புரளும் அவர்கள் தங்கள் திட்டங்களைச் செயலாக மாற்றச் சுலபத்தில் முடிகிறது. ஆங்காங்குள்ள பெருந்தனக்காரர்கள் தங்கள் சொத்துக்களில் இத்தகைய சமூக நலப் பணி களுக்காகக் குறிப்பிட்ட தொகையை ஒதுக்கு கிறார்கள். நிதி வசூல் என்று ஆரம்பித்தால் உள்ளூர்க்காரர்கள் தாராளமாகக் கைநீட்டு கிறார்கள். சர்க்காரிடமிருந்து அவர்கள் எதை யும் எதிர்பார்ப்பதில்லை. இதற்கு முற்றிலும் மாறான சூழ்நிலையில் நாம் இருப்பதால் நாம் திட்டம் போடும் அளவிலேயே நிற்கிறோம்.

பெண் வாக்காளர்களின் கழகம் (League of Woman Voters) என்று பல பகுதி களில் நிறுவியிருக்கிறார்கள். இந்தக் கழகம் எந்த அரசியல் கட்சியையும் சார்ந்ததில்லை.

தங்கள் தங்கள் பகுதிகளில் தேர்தலுக்காக நிற்கும் எல்லா அபேட்சகர்களையும் ஒரே மேடைக்கு வரவழைத்துத் தங்கள் கோரிக்கைகளை அவர்கள் முன் சமர்ப்பிக்கிறார்கள். எந்த அபேட்சகர் அந்தக் கோரிக்கைகளை நிறைவேற்ற அதிக உறுதி கொடுக்கிறாரோ, அவருக்குத்தான் அதிக ஓட்டுக்கள்!

மருத்துவ விடுதிகளுக்கு அவ்வப்போது 'வாலண்டியர்'களாகப் பணியாற்றும் குடும்பப் பெண்மணிகள் இங்கு அனேகர் இருக்கிறார்கள். அந்தச் சேவையில் அவர்கள் மன நிறைவைக் காண்கிறார்கள். பாஸ்டன் நகர மருத்துவசாலையில் டாக்டர்களுடைய மனைவிகள் அத்தனை பேரும் 'வாலண்டிய'ராக இருக்கிறார்கள். சமூகத்தில் இத்தகைய வாலண்டியர்களுக்கு மதிப்பு அதிகம்.

இதுபோன்ற பல சமூக சேவை மன்றங்களிலுள்ள அங்கத்தினர்கள் 'எல்லாம் தலைவர் பார்த்துக்கொள்வார், காரியதரிசி பார்த்துக் கொள்வார்' என்று கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதில்லை. ஒவ்வொருவரும் தங்களுக்குத்தான் முழுப் பொறுப்பு என்ற எண்ணத்துடன் அந்த மன்றங்களின் வளர்ச்சிக்காகப் பாடுபடுகிறார்கள். வெற்றிக்குக் கேட்கவேண்டுமா?

அமெரிக்க நாட்டின் ஒரு பகுதியான 'ஹவாய்' தீவில் உள்ள 'ஹொனலுலு'—நகரில் ஒரு யூத டாக்டர் குடும்பத்தினருடன் ஓரிரு நாட்கள் அவர் தங்கும் வாய்ப்புக் கிட்டியது. அந்தக் குடும்பத்தினர் முன்பே ஒரு தடவை பாரதம் வந்து திரும்பியவர்களாகையால், அவர்களுக்கு இங்கிருந்து வருபவர்கள் மீது அபார ஆர்வம். அந்த அம்மையார் இங்கு வந்து விட்டுத் திரும்பிய போது புடவைகள் வாங்கிக்கொண்டு போயிருக்கிறார். ஆனால் அவைகளை உடுத்தப் பழகவில்லை. பாரதத்திலிருந்து வந்திருப்பவர்களைப் பார்த்ததும் அந்த அம்மையார் தாமும் அவர்களைப்போல் புடவை உடுத்திக் கொள்ள ஆசைப்பட்டார். விருந்தாளிகளே உதவி செய்தார்கள். அத்துடன் நிற்காமல் உதட்டுச் சாயத்தின் உதவி கொண்டு நெற்றியில் திலகமும் இட்டார்கள். அந்த அம்மையாரின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

ஊரை விட்டுக் கிளம்பிப் பல வாரங்களுக்குப் பிறகு இங்குதான் ஸ்ரீமதி வரதப்பனுக்கும் அவருடன் கூடச் சென்ற பிரதிநிதிகளுக்கும், (அவர்களில் சென்னை சட்ட மன்றத்தின் உறுப்பினர் ஸ்ரீமதி அனந்தநாயகியும் ஒருவர்) தாங்களாகவே வாய்க்குப் பிடித்ததைத் தயாரித்துச் சாப்பிடும் வாய்ப்புக் கிட்டியது.

சாதாரணமாக 'டிரக் ஸ்டோர்' (Drug Store) என்று அழைக்கப்படும் தெரு முனைக் கடைகளிலும் 'கேப்'களிலும் காலை ஆகாரம் சாப்பிட நபருக்கு ஒரு டாலர் (ஐந்து ரூபாய்கள்) ஆகும். ஹொனலுலுவில் இவர்கள் ஒன்றுகூடி ஒரு பெரிய கடைக்குள் நுழைந்து ஐந்து டாலர்களுக்குத் தேவையான சாமான்களை வாங்கி வந்தார்கள்; சமைத்தார்கள். மூன்று நபர்களுக்கு மூன்று வேளை அந்தத் தயாரிப்பு ஈடு கொடுத்தது! 'இங்கிருக்கும் வரையில் தயவுசெய்து நீங்கள்



''நாளைக்கு நீங்களெல்லாரும் எங்க வீட்டுக்குச் சாப்பிட வந்துவிடுங்கள். எனக்கு எங்கவீட்டுல் விருந்துடா!''

''பரீட்சையில் எல்லாத்திலேயும் குறைச்சலா மார்க் வாங்கியிருக்கே, எதுக்கடா உனக்கு விருந்து?''

''ஹிந்தியில் நான் சைபர் வாங்கியதற்காக!''

டாலர் கொடுத்து வாங்கும் பண்டங்களின் மதிப்பை மானசீகமாக ஐந்தால் பெருக்கி ரூபாய்க் கணக்குப் போட்டு மூர்ச்சையடையாதீர்கள்! ஒன்றாலேயே பெருக்கி மன நிம்மதியடையுங்கள்' என்பார்களாம் அமெரிக்க நண்பர்கள்.

''அமெரிக்காவுக்கு நான் சென்றது இது தான் முதல் தடவை. ஓரளவு நான் கற்பனை செய்திருந்த அளவுக்கு அங்கு கண்ட நகரங்களும் காட்சிகளும் உயர்ந்தன. இதற்கு விதிவிலக்கு லாஸ்ஏஞ்சல்ஸும் ஹவாயிவுட் பகுதிகளும்தான். பத்திரிகைகள் புத்தகங்கள் படித்து நான் ஹாலிவுட்டைப் பற்றி ஏதோ பிரமாதமாக நினைத்திருந்தேன். அந்தக் கற்பனையை நிஜக் தோற்றம் தொடவில்லை. மற்ற விஷயங்களில் இந்தப் பிரயாணம் மிகுந்த பயனுள்ளதாக இருந்தது. அமெரிக்க மாதர்களின் சமூக வாழ்க்கை, பணி, குடும்ப இயல்பு, கல்வி முதலியவற்றைப் பற்றி நேரடியாகக் கவனித்துத் தெரிந்து கொள்ள முடிந்தது. புத்தகங்களிலும் மாத்திரம் தெரிந்து கொள்ளக் கூடிய விஷயமில்லை இது! அங்கு கற்றுக் கொண்ட நல்ல முறைகளை இங்கும் நடைமுறையில் கொண்டு வர முயற்சி செய்யலாமல்லவா?'' என்றார் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன்.

**உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும்**
**ஓது பற்பல நூல்வகை கற்கவும்**
**இலகு சீருடை நாற்றிசை நாடுகள்**
**யாவும் சென்று புதுமை கொணர்ந்திங்கே**
**திலக வாணுதலார் நங்கள் பாரத**
**தேசமோங்க உழைத்திடல் வேண்டுமாம்;**

என்ற மகாகவி பாரதியாரின் வாக்கு நனவாகும் பொற்காலத்தில் நாம் வாழ்கிறோம் என்று நினைக்க நமக்குப் பெருமையாக இருக்காதா, என்ன?

— திருமூலர்

# கந்தன் கருணை

## 15. தாரக வதம்

சிற்பர மூர்த்தியாகிய செவ்வேட் பரமனுடைய திருவுருவை நோக்கிய தாரகன் வியப்புற்றான். 'இவன் கற்பனை கடந்த ஆதிக் கடவுளே போலும்' என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். எனினும், சிவமூர்த்தி தமக்குத் தந்த வரத்தையும், வன்மையையும், அளவற்ற செல்வத்தையும் நினைந்து பெருமிதம் அடைந்த தாரகாசுரன் தனது நல்ல நினைவுகளை அகந்தையால் அழித்துக் கொண்டு மீண்டும் கோப வசப்பட்டான்.

முருகப் பெருமானை நோக்கிய தாரகன், "திருமாலுக்கும் நான்முகனுக்கும் இந்திரனுக்கும் நம்மிடம் விரோதமுண்டு. ஆனால் எம் தவத்துக்கு இரங்கி வரம் தந்த சிவபெருமானுக்கும் எமக்கும் போர் நிகழ்வதற்குக் காரணம் ஒன்றுமில்லை. ஆதலால்; சிவ குமாரனாகிய நீ நம்முடன் போர் செய்ய வந்த காரணம் யாது? சொல்" என்று கேட்டான்.



திருமுருக
கிருபானந்தவாரியார்

"நாரணன் தனக்கு மற்றை
நான்முகன் தனக்கும் வெள்ளை
வாரணன் தனக்கும் அல்லால்
மதிமுடி அமலனுக்கும்
தாரணி தனில் எமக்குஞ்
சமரினை இழைப்ப இங்கோர்
காரண மில்லை மைந்தா
வந்ததென் கழறு" கென்றான்

முருகப் பெருமான் விடை கூறுவார்: "தாரகாசுர! உயிர்கள் செய்யும் நல்வினை, தீவினைகளுக்கேற்ப அநுக்கிரகமும் தண்டனையும் அளிக்கும் சிவபெருமான் நீயும் உன் சோதரரும் தவமாகிய நல்வினை புரிந்தமையால் தவப்பலனுக

'உங்களுக்குப் பெரும் பலமளித்தார். அந்தப் பலத்தைக் கொண்டு தேவரைச் சிறை வைத்துத் தீவினை புரிந்துள்ள உங்களுக்கு இப்போது தீவினைப் பயனையும் அளிக்கத் திருவுளம் கொண்டுள்ளார். உங்கள் வீரத்தையும் வலிமையையும் அழிக்கும் பொருட்டே நம்மை விடுத்தருளினார்.''

தாரகன் இறுமாந்து ''கருடன் மீது வந்து என்னை எதிர்த்த, திருமாலின் சக்கரம் என் கழுத்தில் ஆபரணமாக இருப்பதை நீ பார்க்கவில்லையா? என்னைப் பகைத்து எதிர்த்தவர்களில் வென்றவர் எவரும் இன்றுவரை இல்லை. எல்லோரும் தோற்றோ அல்லது அழிந்தோ போனார்கள். பாலகனே! நீ முன்பு என் மீது போருக்கு அனுப்பிய தலைவர்களை வென்று கிரௌஞ்ச மலையினுள் இறக்கும்படி செய்தேன்; பல கணங்களையும் அழித்தேன்; நீயும் இப்போது என்னோடு பொருது அழியாமல் உனது தந்தையாகிய சிவபெருமானிடம் செல்லுவாய்'' என்றான்.

ஆறுமுகக் கடவுள் அதற்கு மறுமொழியாக, ''படைக்கலங்களுக்கெல்லாம் தலைமைப் படைக்கலமாகிய நம் வேற்படை ஒரு போதும் பழிப்புக்கிடமாகாது; அது உன் உயிரைக் குடிக்கவே வந்திருக்கிறது. மாயையின் உறைவிடமாகிய கிரௌஞ்ச மலையையும் உன்னையும் வேற்படையால் வென்று நம் சேனைகளை விரைவில் மீட்கின்றோம்'' என்று திருவாய் மலர்ந்தார்.

சிவகுமாரன் கூறியதைக் கேட்ட தாரகனுக்குச் சினம் மூண்டது. வில்லை வளைத்து நாண் ஒலி செய்தான். முருகப் பெருமானும் வில்லை எடுத்து வளைத்தார்; நாண் மீட்டினார். அதன் ஒலியைக் கேட்டே அசுரப் படைகள் அஞ்சின.

ஐயனுக்கும் அசுரனுக்குமிடையே அற்புதமான யுத்தம் நிகழ்ந்தது.

குமாரக் கடவுள் கோடி பாணங்களை ஏவினார். தாரகனின் உடல் முழுவதையும் அந்தப் பாணங்கள் துளைத்தன. தாரகனின் கோபம் மேலும் பெருகியது. இரண்டு கோடி பாணங்களைப் பெருமான் மீது விடுத்தான். செவ்வேட் பரமன் இரண்டு திவ்விய அஸ்திரங்களைச் செலுத்தி, தாரகனுடைய தும்பிக்கையையும் முகத்திலுள்ள கொம்பையும் துண்டாக்கினார். தனது சிறப்பு அங்கங்களை இழந்த தாரகன் மனம் தளர்ந்தான். நாணமும் ஆத்திரமும் பெருக ஆயிரம் பாணங்களை ஏவி ஆறுமுகப் பெருமானுடைய தேரில் உள்ள கொடியை அறுத்து வீழ்த்தினான். அது கண்டு வெருண்டாற் போல் பாவித்த முருகக் கடவுள் எட்டுக் கணைகளைச் செலுத்தி அவனுடைய தேரையும் பாகனையும் தேர்க் குதிரைகளையும் பாழ்படுத்தினார். தாரகன் வேறொரு தேரில் ஏறி ஐந்நூறு அக்கினிக் கணைகளை விடுத்து முருகப் பெருமானுடைய தேர்ப்பாகனாகிய வாயுதேவனின் தோள்களைப் புண்படுத்தினான்.

முருகப் பெருமான் ஆயிரம் கணைகளைச் செலுத்தித் தாரகனின் நெற்றியைத் துளைத்தார். தாரகாசுரன் 'ஓ'வென்று கதறி உதிர வெள்ளஞ் சொரியத் தேர் மீது மயங்கி விழுந்தான்.

தாரகன் மயங்கி விழுந்ததைக் கண்ட அசுர சேனைகள் சினங்கொண்டு முருகப் பெருமானைச் சூழ்ந்து கொண்டார்கள்; சூலம், சக்கரம், தோமரம், பிண்டிபாலம், வேல், வாள், தண்டு முதலிய படைக்கலங்களைச் செலுத்தி ஆரவாரித்தார்கள். முருகப் பெருமான் தம் வில்லை வளைத்துச் சரமழை பொழிந்தார். அவுணர்களின் தலைகளும், மார்புகளும், கரங்களும், தோள்களும் துண்டிக்கப்பட்டன. சிலர் இரத்தக் கடலில் நீந்திச் சென்று கரையேறி ஒளிந்து கொண்டார்கள். சூரியன் முன் மறையும் பனித்துளிகள் போல் தேவ தேவனின் வீர பராக்கிரமத்தின் முன் அசுரர் அனைவரும் அழிந்தனர்.

தாரகாசுரனுக்கு மயக்கம் நீங்கியது. எழுந்து பார்த்தான். தனது மாபெரும் சேனைகளைக் காணாது, துன்பத்துடன் நகைத்தான். "சிவகுமாரன் ஒருவன் என்னுடன் வந்து போர் செய்ததில் நான் எனது நுதிக்கையையும், கோடுகளையும் இழந்தேன். மயங்கி விழுந்தேன்; என் சேனைகளையும் இழந்தேன்; இப்போது தனித்து நிற்கிறேன். அழகுதான் என் ஆண்மை! இச்சிறுவனைக் கொல்வதோ, வெல்வதோ அரிய செயல். ஆகவே, இனி தேவாஸ்திரங்களைச் செலுத்திப் போர் செய்ய வேண்டும்" என்று எண்ணினான். நாராயணாஸ்திரம், பிரம்மாஸ்திரம் முதலிய தெய்வாஸ்திரங்களை விடுத்தான். அந்த அஸ்திரங்கள் எல்லாம் அஞ்சி நடுங்கி வந்து முருகப் பெருமான் பக்கத்தே ஒதுங்கி நின்றன.

சிவபெருமானைத் தேவதையாகக் கொண்ட பாசுபதாஸ்திரத்தை எடுத்து மானத பூஜை செய்த தாரகன் சிவகுமாரன் மீதே அதைக் கோபத்துடன் செலுத்தினான். அச்சிவப் படைக்கலம் நஞ்சையும், தேவப் படைக்கலங்களையும், பூதங்களையும், பாம்புகளையும், சூலங்களையும், அக்கினியையும் உண்டாக்கிக் கொண்டு சர்வ அண்டங்களும் வருந்தும்படியும், சகல உயிர்களும் உலைந்து சுழலும் வண்ணமும் சினத்துடன் சென்றது. முருகப் பெருமான் அதைக் கண்டு தந்தையாகிய சிவபிரானைச் சிந்தையில் தியானித்துக் கொண்டு, ஒரு திருக்கரம் நீட்டிப் பற்றிக் கொண்டார். தந்தவனே திரும்பப் பற்றிக் கொள்வது போலிருந்தது அந்தக் காட்சி.

கந்தவேள் அனையது
கண்டு தந்தையைச்
சிந்தையில் உன்னியோர்
செங்கை நீட்டியே
அந்தவெம் படையினை
அருளில் பற்றினான்
தந்தவன் வாங்கிய
தன்மை யென்னவே.

தாரகன் நிலைகுலைந்து விட்டான். "இன்றே எம் செல்வமும் வாழ்வும் அழிந்தன" என்று ஏங்கலானான்.

'இவன் அறப்போர் அன்றி மாயப் போர் புரிய மாட்டான். நான் மாயைகள் செய்து, மறைந்து நின்று போர் செய்வேன்' என்று எண்ணி, விரைந்து கிரௌஞ்ச மலைமுன் சென்றான். "கிரௌஞ்சமே! நீ விரைந்து மாயைகளைச் செய்வாயாக" என்று கூறினான். உடனே கிரௌஞ்சமலை பல மாயைகளைச் செய்யத் தொடங்கியது. மூப்புரங்களிலும் அந்த மலை வரத் தொடங்கியது; மூப்புரங்களில் உள்ள அசுரர்களாய் வந்தான் தாரகன். கிரௌஞ்ச மலை பலப் பல மேகங்களாக வந்தது; தாரகன் அவற்றினுள்ளே இடியாக வந்தான். கிரௌஞ்சம் பல கடல்களாய் வந்தது; தாரகன் அவற்றினுள்ளே வடவாமுகாக் கனியாய் வந்தான். கிரௌஞ்சம் சக்ரவாளகிரியைச் சூழும் இருளாய் வந்தது; தாரகன் அதனுள்ளே பூதமாய் வந்தான். கிரௌஞ்சம் எட்டுத் திக்கயங்களாய் வந்தது; தாரகன் சடசடவென்ற ஒலியோடு சூலமலைகளாய் வந்தான்; கிரௌஞ்சம் வாயுவாய் வந்தது. தாரகன் அக்கினியாய் வந்தான்; கிரௌஞ்சம் நெருப்புக் கொள்ளியாய் வந்தது; தாரகன் ஆயிரம் கோடி சூரியர்களாய் வந்தான்.

தாரகன் இவ்வாறாக, கிரௌஞ்ச மலையோடு சேர்ந்து எண்ணற்ற மாயைகளைச் செய்து கொண்டு திரிவதைக் கண்ட முருகப் பெருமான், தம் கையிலுள்ள வேலாயுதத்தை நோக்கி, "நீ தாரகாசுரனையும், கிரௌஞ்ச மலையையும் ஒரு கணப் பொழுதில் பிளந்து உயிரை உண்டு, இலக்கத்தொன்பது வீரர்களையும், பூதப் படைகளையும் மீட்டு இங்கே வருவாயாக" என்று பணித்தருளி, அதனைச் செலுத்தினார். அதனை அருணகிரிநாதர் விளக்கும் அழகு படித்துப் படித்து இன்புறத் தக்கது.

அமரமொடும் அசுரர்படை களமீதெதிர்த்த
பொழுது
ஒருநொடியில் அவர்கள் படை கெடவே
லெடுத்து அவனி
தனில் நிருதர் சிரம் உருள ரணதாள்
படுத்திவிடு செருமீதே
கவனமொடும் அலகைநடம் இடவீர
பத்திரர்கள்
அதிரநின மொடு குருதி குடிகாளி
கொக்கரி செய்
தசையுணவு தனில் மகிழ விடுபேய்
நிரைத்திரள்கள் பலகோடி
இமிதமிட நரிகொடிகள் கழுகாட
ரத்தவெறி
வயிரவர்கள் சுழலொரு தனிஆயுதத்தை
விடு
இமிரதின கரஅமரர் பதிவாழ்வு
பெற்றுலவு முருகோனே

சர்வ சங்கார காலத்தில் மாயையாலாகிய உலகங்களையும் உயிர்களையும் சிவபெருமானின் நெற்றிக் கண்ணி




மட்டிலாத களை, மாறாத மென்மை ... உங்கள்
பட்டாடைகளின் பண்புகளை நருவிசாகப் பராமரிப்பது
லக்ஸ் சலவை. கம்பளி, நைலான், ரேயான், டெரிலீன்...
பாங்கான துணிகள் எல்லாமே பார்க்கப் புதிதாய்ப்
பன்னெடு நாள் நீடித்திருக்கத் துணை:
தூய மெல்லிளம் லக்ஸ் தூள்களால் சலவை!

**அத்தனை நருவிசாக ஆடைகளைக் காப்பது லக்ஸ் ஒன்றே!**

LX. 22-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

னின்று தோன்றும் அக்கினி சுடுவது போல, முருகப் பெருமானுடைய வேலாயுதம் தாரகனும் கிரௌஞ்ச மலையும் செய்த மாயைகள் அனைத்தையும் அழித்தது. எம்பெருமானின் ஆறு முகங்களிலிருந்தும் எழுந்த சினம் ஒரு வடிவெடுத்துச் செல்வது போல் அந்த வேற்படை சென்றது. தாரகன், வேற்படையைப் பிடித்து முறித்துப் போடுவதற்காக எதிர்த்து வந்தான். அது அக்கினியை எதிர்க்கக் கொசு வந்ததுபோலிருந்தது. வேற்படை தாரகனின் மார்பைக் கிழித்துக் கிரௌஞ்ச மலையையும் தகர்த்து இரு கொடிய உயிர்களை உண்டது; மலையினுள் துயின்ற வீரர்களுக்கு உணர்வைத் தந்து எழுப்பி விட்டது. பின்னர் ஆசார சீலமாக ஆகாய கங்கையில் நீராடி முருகப் பெருமானின் திருக் கையில் வந்து சேர்ந்தது.

கிரௌஞ்ச மலை பிளந்தவுடனே, அதனுள் மயங்கிக் கிடந்த வீரவாகு தேவர் முதலியோர் மயக்கம் தெளிந்து எழுந்தனர். விரைந்து முருகப் பெருமானை யடைந்து வணங்கித் துதித்தனர்.

கருணைக் கடலாகிய கந்தவேள் அவர்களை நோக்கி, ''நீங்கள் அனைவரும் தாரகனால் கிரௌஞ்ச மலையில் அடைபட்டு அல்லலுற்றீர்களா?'' என வினவினார். ''எந்தையே! தங்கள் திருவருள் இருக்கும்போது அடியோர்கள் அல்லற்படுவதுமுண்டோ? மையலுடன் உறங்குவது போல எத்துயரும் அறியாது மயங்கியிருந்தோமே யன்றி, கிரௌஞ்ச மலையின் மாயத்தால் சிறிதும் துன்பம் அடைய வில்லை'' என்று வீரவாகு தேவர் முதலிய வீரர்கள் மகிழ்ந்து கூறினார்கள்.

முருகக் கடவுள் வீரவாகு தேவரை அழைத்துத் தாரகன் அடுத்த சிவப் படைக்கலத்தை அவருக்கு அளித்தார். எதிரி ஆத்திரத்துடன் எய்த ஆயுதத்தையும் அமுதன் அன்புப் பரிசாக்கி விட்டார். தாரகனுடன் நடந்த போரில் இறந்த பூதர்களை எழுப்பி, அவர்கள் புடைசூழ, வானவர் துதிக்க வீரர்களுடன் போர்க்களத்தினின்று புறப்பட்டார் வெற்றி வேலர். இமய வெற்பைக் கடந்து, தென் திசையில் நடந்து, கதிரவன் மேற்கடலில் மூழ்கும்பொழுது தேவகிரியை அடைந்தார்.

மாலைக் காலம் செவ்வானத்துடன் வந்தது; அதனை யடுத்து இருளும் சூழ்ந்தது; அதனிடையில் இளம் பிறை விளங்கியது. விண் மீன்கள் ஒளிசிந்தின. இரவின் ஆட்சி தொடங்கியது. அப்பொழுது திருமால், நான்முகன், இந்திரன் முதலியோர் முருகப் பெருமானின் செம்மலர் பாத கமலங்களைச் சென்னி பொருந்தப் பணிந்தனர்.

'எம்பெருமானே! தாரகர்களைக் கிரௌஞ்ச மலையோடு அழித்தருள் புரிந்த தேவரீரைப் பூசிக்க விரும்புகிறோம்; இம்மலையில் எழுந்தருள்க'' என்று வேண்டினர். ஆறுமுகக் கடவுள் அவ் வேண்டுகோளுக்கு இணங்கினார். இமையவர்கள் உடல் உரோமஞ் சிலிர்த்துப் பேருவகை எய்தினர்.

குமரக் கடவுள் சேனைகளோடும் தேவர்களோடும் தேவகிரியின் மேற் சென்றார். தம்மைத் தொழுத தேவ தச்சனை நோக்கி, ''நாமும், நம்முடைய தம்பியரும், தேவர்களும் கணங்களும் தங்குவதற்கு இம்மலையில் இப்பொழுதே ஒரு நகரத்தை உண்டாக்குவாய்'' என்று பணித்தருளினார். அவ்வாறே தேவதச்சன் அழகியதொரு நகரத்தையும் அதனுள்ளே எம்பெருமான் எழுந்தருளும் பொருட்டுச் செம்பொன்னாலயத்தையும், அதனுள்ளே இரத்தின சிங்காசனத்தையும் செய்து முடித்து விட்டு முருகப் பெருமானிடம் வந்து தெரிவித்தான்.

முருகப் பெருமான் தன்னைச் சூழ்ந்த அனைவருடனும், அத் திருநகரத்தினுட் சென்று, பூத சேனைகளைத் திருக்கோயில் திருவீதியிலே நிறுவினார். தேரினின்றும் இறங்கி மறைக்கும் எட்டாத மலரடியைச் செம்பொற் பாதுகைகளிலே வைத்து வீரர்களும் தேவர்களும் சூழத் திருக்கோயிலினுள்ளே புகுந்து, பேரொளி வீசும் மணித் தவிசின் மேல் எழுந்தருளினார்.

முருகப் பெருமானைப் பூசிக்க எண்ணிய திருமால் முதலிய தேவர்கள் உமா தேவியாருடைய திருக் கரத்தில் தோன்றிய கங்கையை நினைக்க அது அங்கு வந்து பாய்ந்தது. அதனால் ஆறுமுகனுக்கு அபிஷேகம் செய்தார்கள். அமிர்தம் வைத்த குடங்களைக் கொண்டு வந்து வேதங்களை ஓதிக் கங்கையிலே திருமஞ்சனம் எடுத்தார்கள். பிரமதேவர் முதலிய தேவர்களும் முனிவர்களும் மந்திரம் சொல்லித் திருமஞ்சன மிட்டார்கள். அதன்பின் வேறு பீதாம்பரம் சாத்தி வேறொரு சிங்காசனத்தில் எழுந்தருளி யிருக்கச் செய்து, முருகனுடைய திருநாமம் சொல்லி, நறுமணமாலை சூட்டி, சந்தனக் குழம்பு அணிவித்துப் பச்சைக் கற்பூரம் அப்பினார்கள். கஸ்தூரி திலகம் வைத்து, திருமேனி யெங்கும் திவ்வியாபரணங்

களைச் சாத்தி, மணி ஒலியோடு மலர்களைத் தூவி அருச்சித்து, தூப தீபம் காட்டி, மெய்யன்போடு துதித்தனர். முருகப் பெருமான் அந்த அற்புதமான தேவ பூஜையை ஏற்று அருள் புரிந்தார்.

தாரகன் இறந்த செய்தியைத் தூதர் சொல்லக் கேட்ட தாரகனின் மனைவி சௌரி இடியோசை கேட்ட நாகம் போல் நடுங்கினாள். விழுந்தும், எழுந்தும், தொழுதும் கதறியழுது சென்று தன் கணவனின் உடலின்மீது புரண்டு புலம்பினாள். தாரகனின் மற்ற மனைவியர்களும் வந்து நெருங்கிச் சடலத்தைச் சுற்றிப் புலம்பி அழுதார்கள். ''தன்னுடைய ஆழிப் படையை உனக்கு ஆபரணமாக அளித்த திருமாலும், இந்திராதி தேவர்களும், இயமனும் இன்று அல்லவா மனக் கவலை தீர்ந்தார்கள்?'' என்று கதறினாள் சௌரி.

''உந்துதனி ஆழி உனக்கணியாத் தந்தோனும்
இந்திரனும் ஏனை இமையவர்கள் எல்லோரும்
அந்தகனார் தாமும் அனைவர்களும் இன்றன்றே
சிந்தைதனில் உள்ள கவலையெலாம் தீர்ந்தனரே!''

தாரகாசுரனின் புதல்வனாகிய அசுரேந்திரன், சூரனின் மற்றொரு சோதரனாகிய சிங்கமுகனுடைய நகரமாகிய ஆசுரபுரிக்குச் சென்றிருந்தான். தந்தையின் மரணச் செய்தியைக் கேட்ட அவன் விரைந்து வந்து தாரகனின் உடலை ஒரு தேரின் மீது கிடத்தி, ஈமக் கடன்களைச் செய்து தகனக் கிரியைகள் செய்தான். தாரகன் மனைவியாகிய சௌரியும் மற்ற மனைவியர்களும் உடன்கட்டை ஏற விரும்பினார்கள். அசுரேந்திரன் எவ்வளவோ தடுத்துக் கூறியும் அவர்கள் கேட்கவில்லை. எல்லோரும் உடன் கட்டை ஏறினார்கள். எங்கெங்கு பெண்மை உண்டோ அங்கெல்லாம் கற்பு நிலை உண்டு. அசுரப் பெண்களிடமும் பதிவிரதா தருமம் தலை தூக்கி நின்றது.

அசுரேந்திரன் தன் சுற்றத்தார் சூழத் தென் கடலிலுள்ள வீர மகேந்திரபுரியை அடைந்தான். அங்கு ஆட்சி அதிகாரம் செலுத்தும் தனது பெரியப்பனான சூரபதுமனை யடைந்து வணங்கி, அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு அழுதான்.

''மைந்தனே! ஏன் வருந்திப் புலம்புகிறாய்?'' என்று வினவினான் சூரபன்மன்.

''பெரியப்பா! இந்திரன் செய்த சூழ்ச்சியினால் சிவகுமாரன் பூதப் படைகளோடு வந்து உங்கள் தம்பி தாரகாசுரரைக் கிரௌஞ்ச மலையோடு சேர்த்து வேற்படையினாலே கொன்றான்.''

சூரபன்மன் அடங்காத சினமும் வியப்பும் அடைந்தான். ''மகனே! இது பொய். என்ன நடந்தது? பயப்படாமல் உண்மையைச் சொல்'' என்றான்.

''நான் கூறியது யாவும் உண்மையே'' என்று அசுரேந்திரன் கூறினான்.

தன்னுடைய தம்பி உண்மையிலேயே முருகப் பெருமானால் மாண்டான் என்பதைக் கேள்விப்பட்ட சூரபன்மன் எல்லையில்லாத துயரமும் ஆத்திரமும் கொண்டான். ''என் தம்பியைக் கொன்ற முருகன் மீது இப்போதே போர் தொடுத்தாக வேண்டும். தேரும் ஆயுதங்களும் விரைவில் கொண்டு வாருங்கள்'' என்று ஏவலர்களுக்கு உத்தரவிட்டான் சூரபன்மன்.

அப்போது அமோகன் என்ற மந்திரி சூரபன்மனை வணங்கி நின்றான். ''அசுரேச! சாம — தான — பேதம் என்ற மூன்று முதல் உபாயங்களைப் பின்பற்றாமல் எடுத்த எடுப்பிலேயே நான்காவது உபாயமாகிய போருக்குப் புறப்படுவது முறையல்ல; ஆராயாமல் எந்த ஒரு செயலையும் செய்யக் கூடாது; எதிரிகளின் பலத்தை ஒற்றர்கள் மூலம் அறிந்துகொண்ட பின்பே செய்வது என்ன என்பது பற்றி முடிவு எடுக்க வேண்டும். எதிரிகள் நம்மை விடப் பலம் வாய்ந்தவர் என்று நான் சொல்வதாக எண்ணக் கூடாது. எங்கள் தலைவராகிய தாங்கள் அழிவில்லாதவர்; எல்லா உலகங்களையும் ஆள்பவர். தேவர்கள் யாவரையும் ஏவலராகப் பெற்றிருப்பவர்; திருமாலாலும், பிரமனாலும் புகழப்படுபவர்; இப்படிப்பட்ட தாங்கள் நமது படை பலத்துக்கு மிகவும் குறைந்த பலமுடைய எதிரிகளுடன் போராடினால் அதில் பெருமை என்ன உண்டு? இந்திரன் பேச்சைக் கேட்டுப் பூதப் படை சூழ வந்த நேற்றுப் பிறந்த குழந்தை மீது மகாசுரராகிய தாங்கள் போருக்குப் போவது ஒருவேளை பழிப்புக்கு இடமாகலாம். எனவே பகைவரின் பலத்தை முதலில் அறிவோம்'' என்றான்.

''நன்று நன்று'' என்று கூறி அந்த யோசனையை ஏற்ற சூரபதுமன் பகன், மயூரன், சேனன், சக்கரவாகன், சுகன் முதலிய தூதர்களைக் கூப்பிட்டு, ''கந்த வேளுடைய இயல்பையும், அவனது சேனையின் தொகையையும் ஆராய்ந்து வாருங்கள்'' என்று பணித்தான். அவர்கள் சூரபன்மனை வணங்கி விரைந்து பூமியை நோக்கிச் சென்றார்கள்.

(தொடரும்)

1784
THE E.I.D. PARRY GROUP
1964

# அந்நியச் செலாவணியும் பாரியும்



அந்நியச் செலாவணி* — நாட்டின் இன்றைய பொருளாதாரத்திற்கு அந்நியச் செலாவணி எப்படி மிகவும் முக்கியமான அம்சமோ, அப்படியே தான் இ.ஐ.டி. பாரி குழுவைச்சேர்ந்த தொழில்களின் வளமிக்க வருங்கால வளர்ச்சிக்கும் இது முக்கியமானது.

உணவு தானிய உற்பத்தியைப் பெருக்கவும் இறக்குமதி செய்யப்படும் ரசாயன உரங்களின் அளவைக் கணிசமாகக் குறைக்கவும் இ. ஐ. டி. - பாரி ஸ்தாபனங்கள் எப்படி உதவுகின்றன என்பதற்கு இங்கே உற்பத்தியாகும் ரசாயன உரத்தை ஒரு நல்ல உதாரணமாகச் சொல்லலாம். 1963-64ம் ஆண்டில் உள்நாட்டு ரசாயன உர உற்பத்திக்கும் நாட்டின் தேவைக்குமிடையே உள்ள பற்றாக்குறையைச் சமாளிக்க ரசாயன உர இறக்குமதிக்காக ரூ. 40 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதே ஆண்டில் இ. ஐ. டி. பாரி ஸ்தாபனம் 250,000 டன் ரசாயன உரங்கள் உற்பத்தி செய்து விநியோகம் செய்யும். மூன்றாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் இதன் அளவு மேலும் விரிவடைந்து உற்பத்தி அதிகமாகப் பெருகும்.

உரத்தைத் தவிர இந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஒன்பது இதர கம்பெனிகள் உற்பத்தி செய்யும் பொருள்களாவன—சர்க்கரை, மிட்டாய் வகைகள், பீங்கான் சுகாதாரச் சாமான்கள், அமிலங்கள், ரசாயனப் பொருள்கள், கரியமிலவாயு மற்றும் தொழில்களுக்கும் இதர உபயோகத்துக்கும் தேவையான ஆல்கஹால் ஆகியவை.

## இ. ஐ. டி. — பாரி குரூப், மதராஸ்

* மூன்றாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் அந்நியச் செலாவணி தேவை ரூ. 1900 கோடிக்கும் அதிகம்

தேசியப் பாதுகாப்புக்கு உங்கள் பணியைச் செய்யுங்கள்

FDS-PJ-368

# ஜீவகீதம்



அத்தியாயம் ஏழு

## இப்படியும் ஒரு பிழைப்பா?

கடற்கரையில் காற்று வாங்க வந்தவர்களுக்கு அன்று நல்ல பொழுது போக்குக் கிடைத்தது. கூட்டம் நடக்கும் இடத்தை நோக்கி மந்தை மந்தையாகச் சென்றனர்.

பரந்த அளவில் ஜனக் கூட்டத்தைப் பார்த்ததும் பேச்சாளர் வெகு உற்சாகமாகப் பேச ஆரம்பித்தார்.

சபேசனின் தோள்மீது கையைப் போட்டு அழைத்துக்கொண்டு ஜனக்

ஜெகசிற்பியன்

கூட்டத்தின் பின்னால் போய் நின்றான் நச்சி. அவனும் அப்போது வெகு கறு கறுப்பாகக் காணப்பட்டான். சபேசனுக்கு இது புது அநுபவம். தன் தாயகம் வந்த பின் அரசியல் பொதுக் கூட்டமொன்றில் அவன் கலந்து கொள்வது இதுவே முதல் தடவை. சுதந்திர பாரதத்தின் முன்னேற்றத்தையும், அதன் அரசியல், பொருளாதார, சமூக நிலவரங்களையும் இந்தக் கூட்டத்தில் பேசுபவர்களின் வாயிலாக ஓரளவேனும் அறிந்து கொள்ளலாம் என்ற ஆவலுடன் பிரசங்கத்தை ஊன்றிக் கவனிக்கலானான்.

அப்போது பேசிக் கொண்டிருந்த பேச்சாளர் தெற்கே பாண்டிச்சேரி முதல் மேற்கே பெங்களூர் வரையில் சூறாவளிப் பயணம் செய்து பல அரசியல் மேடைகளில் ஏறிப் பிரசங்க மாரி பொழிந்து அநுபவப்பட்டவர். அதற்கு மேல் வேறு எந்த ராஜ்யங்களுக்கோ அல்லது வேறு எந்த வெளி நாடுகளுக்கோ போய் அறியாதவர். ஆயினும் மேல்நாட்டு மக்களின் குணாதிசயங்கள், அவர்களது கட்டுப்பாடான நடத்தைகள், ஒழுக்க சிந்தனைகள் ஆகியவற்றைப் புகழ்ந்தார்; அவர்களுடைய பொருளாதார, சமூக, கல்வி, கலை ஞான மேம்பாடுகளைப் பற்றிப் புள்ளி விவரங்களோடு எடுத்துக் காட்டினார்; அந்த நாடுகளுடன் நம் நாட்டையும், அந்த மக்களுடன் நமது மக்களையும் ஒப்பிட்டுப் பார்க்க முயன்றார். அப்படி ஒப்பிடவே முடியாத வகையில்



நம் நாடும் நமது மக்களும் தாழ்ந்து கிடப்பதை ஆணித்தரமாக விளக்கிச் சொல்லி வெளுத்து வாங்கிக்கொண்டிருந்தார். அதாவது, எதிரே குழுமியிருந்த ஜனங்களை, 'உருப்படாதவர்களே, ஒழிந்து போங்கள்' என்றுதான் அவர் சொல்லவில்லை; மற்ற எல்லா விதமான வசைமொழிகளையும் பிரயோகித்துக் கேலியும் கிண்டலுமாக-தரக் குறைவான உபமான உபமேயங்களுடன் — அவர்களை நன்றாகத் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தார். அயல்நாடுகளிலிருந்து யாராவது ஒருவர் வந்து அவருடைய பேச்சைக் கேட்டால், 'இவர் என்ன, இந்தியாவுக்கு எதிரி தேசத்தவராய் இருப்பாரோ' - என்றுதான் எண்ணுவார்.

'ஆனால், அங்கு கூடியிருந்த ஜனங்களுக்கோ ஒரே உற்சாகம்! மகிழ்ச்சி! அவ்வப்போது கைதட்டல், சிரிப்பு, பரவச ஆரவாரம்! தங்களை நேருக்கு நேராகப் பார்த்து, தங்கள் காதுபடவும் கண்ணுக்கெதிரேயும் ஒருவர் வாய்க்கு வந்தபடியெல்லாம் \ திட்டுவதை அவர்கள் வெகுவாக ரசித்தும் வரவேற்றும் கொண்டிருந்தார்கள்.

சபேசன் வியப்பும் திகைப்புமாக வெலவெலத்து நின்றான். வெட்கத்தால் அவன் உடல் குன்றிக் குறுகியது. வேதனையால் மனம் குமுறிக் கொந்தளித்தது. நெருப்பின் மேல் நிற்பவன் போல் நெளிந்து துடித்தான். அவனால் தன் ஆத்திரத்தை அடக்கவே முடியவில்லை. ''சே! இதுவும் ஒரு பேச்சா!... இதுவும் ஒரு பொதுக் கூட்டமா? பேச்சுரிமை என்ற பெயரால் ஒரு மாபெரும் தேசத்தையும் அதன் மாண்பு மிக்க மக்களையும் எத்தனை கேவலமாக இழித்துப் பழித்துப் பேச இங்கே அநுமதிக்கப்படுகிறது!'' என்று அருவருப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டே சற்று அப்பால் நகர்ந்தான்.

''இன்னு, தம்பி! பார்த்தியா, பலானவர் எப்படிப் பேசுறாரு? படா குஷியா இல்லே?'' என்று கேட்டு ஓர் அவுட்டுச் சிரிப்புச் சிரித்தான் நச்சி.

சபேசன் அவனை முறைத்துப் பார்த்துவிட்டு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

''ஏன் பிரதர்! உனக்குப் பிடிக்கவில்லையா இந்தப் பேச்சு?''

''இல்லை, அண்ணே! என்னால் இந்த அவமானத்தைத் தாளவே முடியவில்லை'' என்றான் சபேசன்.

''அவமானமா? இப்போ யாரு உன்னை இன்னு சொல்லிப்பிட்டாங்க?''

''என்னை மட்டுமா? உன்னைக்கூடத்தான் — இங்கே கூடியிருக்கிற இத்தனை ஆயிரம் ஜனங்களையும் சேர்த்துத்தான் — அதோ, உயரமான மேடையில் நின்று கொண்டிருப்பவர் நன்றாக அவமானப்படுத்திப் பேசுகிறாரே, கேட்கவில்லையா....?''

அந்தப் பேச்சாளரின் பிரசங்கத்தை மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்த சிலர் பின்னால் திரும்பிப் பார்த்தார்கள்.

''அட யாரூவன், விஷயம் தெரியாதவனாயிருக்கிறான்! மேடைப் பேச்சுன்னு அப்படித்தான் இருக்கும். இந்த மாதிரி பேசலேன்னு அவர் பேச்சைக் கேட்கிறதுக்கு எவன் வருவான்?'' என்று மற்றவர்களின் கவனத்தைத் திருப்பும் வகையில் சற்று உரக்கவே கேட்டுவிட்டான் நச்சி.

''பேசட்டும்; அவர் எப்படி வேண்டுமானாலும் பேசிக்கொள்ளட்டும். ஆனால் நம்முடைய நாட்டையும் நமது மக்களையும் மற்ற தேசங்களோடு — மற்ற தேசத்து மக்களோடு — ஒப்பிட்டுப் பேசுவதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. நம் தேசம் வறுமை மலிந்ததா யிருக்கலாம்; நமது மக்கள் ஒழுங்கீனர்களா யிருக்கலாம் — இதையெல்லாம் பற்றி நமக்கு நாமே பேசிக்கொள்வோம். மற்றவற்றுடனும் மற்றவர்களுடனும் இணைத்துப் பேசி நம்மையும் நம் நாட்டையும் தாழ்த்திக் கொள்ள வேண்டாமே! ஏனென்றால், மனிதராகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒரு சொந்த நாடும் ஒரு சொந்த இனமும் இருக்க வேண்டியது எவ்வளவு அவசியம் என்பதைச் சொந்த நாட்டில் சொந்த இனத்தாரோடு வாழும் நீங்கள் உணராமலிருக்கலாம்; ஆனால் கடல் கடந்து வேற்று நாடொன்றுக்கு வாழப் போய் அங்கு வாழ முடியாமல் சொத்துச் சுகங்களை இழந்து, அல்லல்பட்டு, ஆதரவற்ற அகதியாக என் தாய்நாட்டுக்கு ஓடி வந்திருக்கும் நான் அதை நன்கு உணர்கிறேன். எனக்கென்று ஒரு நாடு இல்லாதிருந்தால் நான் எங்கு போய்த் தஞ்சமாய்த்திருப்பேன்? எனக்கென்று ஓர் இனம் இல்லையென்றால் நான் யாரை 'அண்ணே' என்றும், 'அக்கா' என்றும் அழைத்திருப்பேன்? எனவேதான் இது போன்ற பேச்சுக்களை என்னால் கேட்கச் சகிக்க முடியவில்லை என்கிறேன்.''

உள்ளார்ந்த ஆத்திரத்துடனும் உணர்ச்சிக் குமுறலுடனும் இவ்வாறு சொன்ன சபேசனை வியப்புடன் உற்றுப் பார்த்த நச்சி குபுக்கென்று சிரித்துக் கொண்டே, ''அடங்க இஸ்கி! இன்னுடா இவன் என்னென்னமோ பேச

# டாடாவின் ஷாம்பு





## அபூர்வமான பளபளப்பைத் தருகிறது.




நவநாகரீக மாதர்கள் டாடாவின் ஷாம்புவையே உபயோகிக்கின்றனர். காரணம் கூந்தலைச் சுத்தம் செய்வதற்கெனவே விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. அது. கூந்தலைத் துப்புரவாகவும், சுலபமாயும் சுத்தம் செய்கிறது டாடாவின் ஷாம்பு. கொழிக்கும் அதன நுரை

கூந்தலிலுள்ள தூசியை அகற்றி, கூந்தலைப் பட்டுப்போன்ற மென்மையுடனும். பளபளப்புடனும் மிளிரச்செய்கிறது. நறுமணத்திற்கோ கேட்கவேண்டாம். கூந்தல் சுத்தமாகவும், நறுமணத்துடனும் இருக்க நீங்களும் டாடாவின ஷாம்புவை உபயோகியுங்கள்.

**எழில்மிக்க, மிருதுவான, பரிமளக் கூந்தலுக்கு — டாடாவின் ஷாம்பு!**

BI-TS-69 TAM

ளுன்?.... தம்பி, நீ ரொம்ப நல்லா பேசறே! இரு இரு. நம்ப தோஸ்து கிட்டே சொல்லி எங்கனுச்சும் ஒரு மேடையிலே உன்னே ஏத்திப்பிடறேன்; அங்கே இதே மாதிரிப் பேசு! அம்மா தைரியமாப் பேசனும்! எல்லாரும் கைதட்டுவாங்க! இன்னு, பேசறயா?'' என்ருன். சுற்றி நின்றவர்கள் இதைக் கேட்டுக் 'கொல்'லென்று நகைத்தார்கள். சபேசனுக்கு மிகவும் அவமானமாகி விட்டது. அவன் தலைகுனிந்து கொண்டு மௌனமாயிருந்தான்.

அவனைக் குஷிப் படுத்துவதற்காக அருகில் நெருங்கி வந்த நச்சி, ''அது சரி; இம்மாந்தூரம் பேசறியே, இந்த நாட்டிலே உனக்குப் பிடிச்சது எது? ஒண்ணைச் சொல்லு, பார்ப்போம்?'' என்று ஏதோ ஒரு பெரிய கேள்வி கேட்டுவிட்டாற் போன்ற பெருமிதத்துடன் மற்றவர்களை ஓரக்கண்ணுல் கவனித்தவாறு அலட்சியமாகச் சிரித்தான்.

கறுத்துக் கிடந்த சபேசனின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. கண்களில் ஓர் அபூர்வ ஒளி பளிச்சிட்டது. ''எனக்குப் பிடித்ததா?.... இந்த நாடு முழுவதுமே எனக்குப் பிடிக்கிறது அண்ணே! இன்னும் குறிப்பாகச் சொல்லவேண்டுமானுல், நம் நாட்டுத் தேசிய கீதம் எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கிறது!'' என்று தன்னை மீறிய பக்தி விநயத்துடன் தணிந்த குரலில் சொன்ஞன் அவன்.

''அப்படின்னு, கூட்டம் முடியற வரையில் இங்கேயே இரு: 'தேசிய'கீதம் பாடுவாங்க, கேட்டுவிட்டுப் போவ!'' என்று குறும்பாகக் கூறிச் சுற்றி நின்றவர்களைப் பார்த்துக் கண் சிமிட்டிய நச்சி, எதையோ நினைத்துக்கொண்டவனுய் அவசரமாகத் திரும்பினுன். 'ஒப்பிலக்கணப் பேச்சாளர்' உச்ச ஸ்தாயியில் பேசிக் கொண்டிருந்தார். அவருடைய வசைவுப் பேச்சை வெகுவாக ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தது ஜனக் கூட்டம். அவன் அங்கிருந்து மெல்ல நழுவி மேடைப் பந்தலின் பக்கவாட்டாகச் சென்று ஒரு படகுக்குப் பின்னுல் நின்றுகொண்டான்.

தன்னை அவன் தனியாக விட்டுச் சென்றதைக் கண்ட சபேசனுக்கு உள்ளூறச் சிறிது அச்சம் ஏற்பட்டது. நாலு பேருக்கு முன்னுல் அவனுடைய 'விசிறி'யான அந்தப் பேச்சாளரின் பிரசங்கத்தைத் தான் மட்டம் தட்டிப் பேசியது பிடிக்காமல் தன்மீது கோபம் கொண்டு அப்படித் தனியே போய் நிற்கிருனே என்று எண்ணிக் கலக்கம் அடைந்தான். பிறகு 'அப்படி இருக்காது' என்று தனக்குத் தானே சமாதானமும் சொல்லிக் கொண்டான். பஸ்ஸில் அந்த மப்ளர்காரரைச் சந்தித்ததிலிருந்தே அவனுடைய போக்கு ஒரு தினுசாக மாறியிருப்பதை அவன் கவனிக்கத் தவறவில்லை.

இரவு மணி ஏழரைக்குமேல் ஆகிவிட்டது. அந்த நேரத்தில் கடற்கரையோரச் சூழ்நிலையைப் பார்க்க மிகவும் ரம்மியமா யிருந்தது. ஆனுலும் சபேசனுல் அங்கு இருப்புக்கொள்ள முடியவில்லை; போய் விடவும் வழி தெரியவில்லை. நச்சியின் துணையின்றி அவன் எங்கே போவது? என்ன செய்வது? தன்னுடைய சொந்தக் கவலைகளில் ஆழ்ந்தவனுய், ஆர்ப்பரிக்கும் கடல் அலைகளை வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்ருன் அவன்.

திடீரென்று கூட்டத்தில் ஏதோ சலசலப்பு ஏற்பட்டது. ஒலிபெருக்கியில் பிரசங்கம் நின்றது. ஜனங்கள் நாலா பக்கமும் சிதறி ஓடினர். மேடையில் அமர்ந்திருந்த தலைவர்கள் பெஞ்சுக்கு அடியிலும் நாற்காலிகளுக்குப் பின்னுலுமாக நுழைந்து ஒளிந்தனர். இவ்வளவு நேரம் வீராவேசமாகச் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தவர் இப்போது எங்கு சென்ருர் என்றே தெரியவில்லை. ஒரே கூச்சல்! அலை ஓசையுடன் சேர்ந்த கலவரக் கூக்குரல்கள்!

முன்னெச்சரிக்கையாக வந்திருந்த ஏழெட்டுப் போலீஸ்காரர்கள் 'லாத்தி'களைச் சுழற்றிக்கொண்டு ஜனக் கூட்டத்தினிடையே புகுந்து அங்குமிங்குமாக விரைந்தனர்.

''விடாதே, பிடி! அதோ, அவன் தான்! அவன்தான்!''

படகுக்குப் பின்னுல் திருதிருவென்று விழித்துக்கொண்டு நின்ற நச்சியை நோக்கிப் பொதுஜனங்களும் போலீஸாரும் பாய்ந்து சென்றனர்.

சடாரென்று படகினுள் எகிறிக் குதித்த நச்சி, தனது மேல் சட்டையைக் கழற்றித் தலைப்பாகையாகச் சுற்றிக்கொண்டு மறுபக்கம் இறங்கி, ''ஹாய்! அதோ ஓடருன், பார்! சோமாறி! உடாதே, உடாதே! ஓடு. பிடி!'' என்று உரக்கக் கத்திக் கொண்டே சபேசன் இருந்த இடத்தை நோக்கி ஓடி வந்தான். அவனுடைய இந்தத் திடீர் மாய்மாலத்தில் ஏமாந்து குறி தவறிப் போன போலீஸாரும் பொது ஜனங்களும் அவனேடு சேர்ந்து கத்திக்கொண்டே அவனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னுல் பாய்ந்தனர்.

''அதோ, நிக்கிறான் பார், ஒன்னும் தெரியாத மாதிரி! அந்தக் கயிவாத்துதான்! புடி, உடாதே அவனே!'' ஜனக் கூட்டத்தின் நடுவிலிருந்து நச்சியின் குரல் தனியாகக் கேட்டது.

பிரமை பிடித்தவன்போல் திகைத்து நின்ற சபேசனைப் போலீஸார் சூழ்ந்து கொண்டனர்.

'' இவன்தான் அடிச்சிருப்பான். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி இங்கே தனியா 'லெக்சர்' அடிச்சுக்கிட்டு இருந்தான். அப்பவே நினேச்சேன், இவன் கலாட்டா பண்றதுக்கு வந்திருக்கிறான்னு. பயலே விடாதீங்க!'' — கூட்டத்திலிருந்து ஒருவர் இப்படிக் கூவினார்.

'' ஐயையோ ! நான் ஒன்னும் பண்ணலியே ! என்னே ஏன் பிடிக்கிறீங்க?... என்னே ஏன் அடிக்கிறீங்க?'' என்று குமறினான் சபேசன்.

''ஆங், பட்டா! உதார் காட்டறியா?.... உடாதீங்க சார், அவனே ! கழுத்தாம்பட்டியிலே ரெண்டு வைச்சுத் தள்ளிக்கிட்டுப் போங்க!'' — இது நச்சியின் குரல்.

''அண்ணே, அண்ணே! நீகூடவா இப்படிச் சொல்லறே ? நான் ஒன்னும் பண்ணலே அண்ணே!'' என்று கதறினான் சபேசன்.

''ஆய்ங்! இன்னா கமாலா பேசறான் பார்த்தியா? செஞ்சதையும் செஞ்சிப்பிட்டு - அண்ணாத்தையாம், மச்சானும்! போ நைனா, போ! செமப்புடி புடிப்பாங்க, போ!''— நச்சிக்கு ஒரே சிரிப்பு, கும்மாளம்!

போலீஸார் சபேசனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு அப்பால் சென்றனர்.

''அமைதி! அமைதி!''

ஒலிபெருக்கி மீண்டும் அலறியது. கலவரமடைந்து சிதறிக் கலைந்த ஜனக் கூட்டம் ஒன்று சேர்ந்தது. அந்தர்த்தியானமான தலைவர்களெல்லாம் இப்போது மேடையில் கம்பீரமாகக் காட்சியளித்தார்கள்.

''பெரியோர்களே! தாய்மார்களே ! உங்கள் அனைவருக்கும் முதற்கண் என் வணக்கம்!.....''

கூட்டத்தில் அமைதி நிலவி உற்சாகம் தலைதூக்கியது.

''யாருடா அது? மருதமுத்துவா? ரொம்ப ஷோக்காப் பேசுவாருடா!''

''ஆமாண்டோய்! எம்.சி. எலெக்ஷனிலே நின்னு முகப்பட்டா போட்டுக்கிட்டாரே, அவர்தாண்டோய்!''

''போடா, இப்ப அவர் எம்.பி.க்கு நின்னாக்கூட ஜெயிக்கக் காட்டு




''சார்! சாப்பிடறேளா?''
''ஆமாம்!''
''டேபிளா? பலகையா?''
''டேபிளையும் பலகையையுமா சாப்பிடச் சொல்றேள்; பஞ்சம் அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா...?''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வாருடா!....இன்னா பேச்சு, இன்னா பேச்சு! அமக்களம்!''

''சரிதான், நீ உட்கார் தம்பி! இடுப்பு மேலே கை வைச்சுகினு நின்னு பின்னாடி இருக்கிறவங்களுக்கு எப்படித் தெரியும்?''

''முதல்லே அந்தக் கடலே, பட்டாணிக் கடைக்காரனேக் கழுத்தைப் பிடிச்சுக் கீழே அமுக்குங்க சார்!''

இப்படிச் சில குரல்கள் எழுந்தன.

''அமைதி! அமைதியாக இருக்கும்படி தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.'' — பின்னால் கையைக் கட்டிக் கொண்டு ஒலிபெருக்கிக்கு முன்னால், மேடையிலே நின்ற மருதமுத்து மீண்டும் இவ்வாறு விண்ணப்பம் விடுத்தார். அவர் வேறு 'யாரும் அல்ல; அந்த மப்ளர்காரர்தான் !

ஜனங்கள் அமைதியாகவும் ஆவலோடும் அவர் பேச்சைக் கேட்கத் தயாராயினர். மருதமுத்து பேச ஆரம்பித்தார்: ''தோழர்களே! சற்றுமுன் இங்கு என்ன நடந்தது என்பது உங்கள் அனைவருக்கும் தெரியும். இதோ பாருங்கள் ; என் கையில் என்ன இருக்கிறதென்று கவனமாகப் பாருங்கள்..''

இடது கையில் மறைத்து வைத்திருந்த ஏதோ ஒரு பொருளை எல்லாருக்கும் தெரியும்படியாகத் தூக்கிக் காட்டினார் மருதமுத்து. அது ஒரு பழைய பாதரட்சை !

''ஆமாம், தோழர்களே! நமது மதிப்புக்குரிய தலைவர் அவர்களைப் பேச விடாமல் தடுத்துக் கூட்டத்தில் குழப்பம் ஏற்படுத்துவதற்காக, மாற்றுக்

கட்சித் தோழர்கள் இந்தப் பாதரட்சையை அவர்மேல் வீசச் செய்திருக்கிறார்கள்!.... இது கண்ணியமான காரியம்தானா? இது மிகவும் கண்டிக்கத்தக்க செயல் அல்லவா?''

கூட்டத்தில் சிறு கலகலப்பு; சலசலப்பு. மேடைக்குப் பக்கவாட்டில் நின்று ஆனந்தமாகச் சிகரெட் குடித்துக்கொண்டிருந்த நச்சி இதைக் கேட்டு மெல்லச் சிரித்தான். மருதமுத்து மீண்டும் பேசினார்:

''ஆனாலும், தோழர்களே! நாம் அமைதியை இழக்கக் கூடாது. இத்தகைய இழிவான நடைமுறைகளில் இறங்கிய மாற்றுக் கட்சித் தோழர்கள் வெட்கித் தலைகுனியும்படி நாம் இப்போது நடந்துகொள்ள வேண்டும்!... ஆமாம் தோழர்களே, இதோ என் கையிலிருக்கும் இந்தப் பாதரட்சை மிக மிகப் பழசானதுதான்; ஐந்து பைசாக்கூடப் பெறுமான மில்லாதது தான். ஆயினும் நமது மதிப்புமிக்க தலைவர் அவர்களின் மீது வீசப்பட்டதால் இதன் மதிப்பு இப்போது உயர்ந்து விட்டது. இனி இது ஒரு பாதரட்சையல்ல; விலையுயர்ந்த வெள்ளிக்கட்டி; அல்ல, அல்ல; தங்கப்பாளம்! எனவே, இதை உங்களிடம் ஏலம் விடப் போகிறேன். நமது மதிப்புக்குகந்த தலைவர் அவர்கள் மீது எறியப்பட்ட இதனை ஏலத்தில் எடுத்து அவரிடம் நீங்கள் கொண்டுள்ள அன்பையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்தி மாற்றுக் கட்சித் தோழர்களுக்கு நல்லதொரு பாடம் கற்பிப்பீர்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன்.''

கூட்டத்தில் கைதட்டல்; ஆரவாரம். மருதமுத்து உற்சாகமாகத் தொண்டையைக் கனைத்துக்கொண்டு பேசினார்: ''தோழர்களே! இதோ, இது தான் அந்தப் பாதரட்சை!... ஏலம்... ஒரு ரூபாய்... ஒரு ரூபாய்...''

கூட்டத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது: ''ஐந்து ரூபாய்!''

''ஏலம்... ஐந்து ரூபாய்... ஐந்து ரூபாய்....''

இன்னொரு குரல்: ''பத்து ரூபாய்!''

''ஏலம்... பத்து ரூபாய்... பத்து ரூபாய்...''

மற்றொரு குரல்: ''இருபது ரூபாய்!''

''இருபது ரூபாய்...... உரக்கக் கேளுங்கள்; ஏலம், இருபது ரூபாய்...''

முதலில் கேட்ட குரல்: ''இருபத்தைந்து ரூபாய்!''

''ஆ.... இருபத்தைந்து ரூபாய்; தலைவர் மேல் வீசப்பட்ட பாதுகை இருபத்தைந்து ரூபாய்!... ஒரு தரம்... இரண்டு தரம்!... என்ன, இவ்வளவு தானா?.... மூணு தரம்!... சரி; யார் கடைசியாகக் கேட்டது? அந்தத் தோழரை இப்படி மேடைக்கு வரும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்!''

ஏதோ தொழிற்சாலை ஒன்றில் மாதம் முப்பது நாள் உழைத்துப் பெற்ற சம்பளத்துடன் அந்தக் கூட்டத்துக்கு வந்திருந்த ஓர் ஏழைத் தொழிலாளி தயக்கத்துடன் மேடைமேல் ஏறினான்.

''வாருங்கள், தோழரே! தமது தலைவரிடம் நீங்கள் வைத்துள்ள பேரன்புக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்!'' என்று ஒலிபெருக்கியில் சொல்லிவிட்டுத் திரும்பிய மருதமுத்து, அந்தத் தொழிலாளி தனது நடுங்கும் கரத்தால் எடுத்துக் கொடுத்த இருபத்தைந்து ரூபாய் நோட்டுகளை வாங்கி எண்ணிப் பார்க்காமலே ஜேபியில் போட்டுக் கொண்டு, அவனுடைய காலியான கிழிந்த சட்டைப் பையில் பாதரட்சையைத் திணித்துக் கீழே இறக்கி விட்டார்.

கையிலிருந்த சிகரெட்டை வீசியெறிந்துவிட்டு விரல்களைச் சொடுக்கிய நச்சி, ''ஆங்... அடிச்சாண்டா லக்கு! அடங்க, டகல்பாஞ்சி! எனக்கு ஐஞ்சு ரூபா கொடுத்துப்பிட்டு இருபத்தஞ்சு ரூபா சம்பாரிச்சுட்டானே!'' என்று அடித் தொண்டையில் முணுமுணுத்துக்கொண்டே அங்கிருந்து எங்கோ விரைந்து சென்றான். (தொடரும்)



# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**பொடுகு**
இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





**கேசம் உதிருதல்**
உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**
இங்கிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்கு அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினல் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

**ப்யூர் சில்விக்ரீன்**




கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/65

# கயல்விழி

> ''பாடகும் சிறப்பிற் பருந் வாள்ரேப்
> ஆடகப் புரிசை ஆயிரத் தளியிற்
> சோழ வளவன் அபிஷேக மண்டபத்து
> வீராபிஷேகஞ் செய்து புகழ் விரித்து...''
>
> — சுந்தர பாண்டியன் மெய்க்கீர்த்தி

பத்தாம் அத்தியாயம்

## வெற்றியின் சோதனை

ஆரியப் படையூர், புதுப் படையூர், பம்பைப் படையூர், மணப்படையூர் ஆகிய பல்வேறு படையூர்களும் புடை சூழக் கம்பீரச் செருக்கோடு நின்றது சோழ சாம்ராஜ்யத்தின் ஆதித் தலைநகரமான பழையாறை மாநகர். சாம்ராஜ்யத்தின் பல்வேறு படையினரின் குடியிருப்புக்களிடையில் அந்த லட்சோபலட்சம் படை வீரர்களையும் ஆட்டிப் படைக்கும் வலிமை கொண்ட படைத் தலைவர்கள் அங்கு வாழ்ந்திருக்கிறார்கள். சோழ சாம்ராஜ்யத்தின் முதுகெலும்பும் கங்காபுரியின் இதயத் துடிப்பும் பழையாறை நகரந்தான்.

அந்தப் பெரு நகரத்துச் சோழ மாளிகையின் ஆயிரத்தளி மண்டபம், வானுற ஓங்கி உயர்ந்து நின்றது. எத்தனையோ சோழ மன்னர்கள் பரம்பரை பரம்பரையாக வீராபிஷேகம் செய்து முடி சூட்டிக் கொண்ட ஆயிரக்கால் மண்டபம் அது. ஆயிரம் தூண்களிலும் ஆயிரம் விளக்குகள் சுடர்விட்டுப் பொன்னொளி வீச, சிற்றரசர்களும், பெரு வீரர்களும் புடைசூழ, சக்கரவர்த்திகள் பலர் அங்கே விழாக்கொண்டாடியிருக்கிறார்கள். புலவர்கள் அந்த ஆயிரத்தளி மண்டபத்தையும் அதில் வீற்றிருந்து விழா எடுத்தவர்களையும் பூரிப்போடு தீஞ்சுவைத் தமிழில் பாடியிருக்கிறார்கள்.

சுந்தர பாண்டியனின் வீராபிஷேகத்துக்கு விழுப்பரையர் அந்தப் பழையாறைப் பழம் நகரையும் அதன் ஆயிரத்தளி



# அகிலன்

மண்டபத்தையுமே தேர்ந்தெடுத்தார். பெரும் படைத் தலைவர்கள் மழவச் சக்கரவர்த்திக்கும் அழகப்பெருமானுக்கும் அதில் எல்லையற்ற ஆனந்தம். மதுரையின் அரண்மனைத் திருமாளிகையில் எத்தனை முறை தங்களது வீராபிஷேகத்தை நடத்தியிருக்கின்றனர் சோழர்கள்! அதன் பெயரையே 'சேர பாண்டியர் தம்பிரான்' என்று மாற்றியமைத்து, அதில் வீராபிஷேகம் செய்து கொண்டவரல்லவா குலோத்துங்க சோழர்?

''சரித்திரம் தலைகீழாகத் திரும்பி விட்டது!'' என்று குதூகலத்தோடு விழுப்பரையரிடம் கூறினார் மழவச் சக்கரவர்த்தி.

''வரலாறு தானாகத் திரும்புவதில்லை'' என்றார் விழுப்பரையர்; ''தலைவர்களால் அது திருப்பப்படுகிறது; உருவாக்கப்படுகிறது. நம்முடைய இளைய பாண்டியரின் தலைமையில் பாண்டிய நாட்டின் இரண்டாவது பொற்காலம் உதயமாகி விட்டது!''

மெய் சிலிர்த்தது மழவச் சக்கரவர்த்திக்கு. ''பெரிய பாண்டியர் இங்கு வந்து தம் கண் குளிர இந்தக் காட்சியைக் காணவில்லையே என்ற வருத்தம்தான் எனக்கு'' என்றார் அவர்.

''அவர் மதுரையில் தங்கிவிட்ட காரணம் நாம் அறிந்ததுதானே? குலோத்துங்கர் உயிருடன் உள்ளவரையிலும் அவருக்கு எதிராகத் தாம் வாளெடுத்துச் சோழ நாட்டுக்குள் புகுவதில்லை என்ற பிடிவாதம் கொண்டிருப்பவர் அவர். அவருடைய தந்தை விக்கிரம பாண்டியருக்கு நாட்டை அளித்தவர் குலோத்துங்கர். தந்தையைப் போன்றே அவரும் குலோத்துங்கரிடம் நன்றி கொண்டிருப்பவர். வெஞ்சினம், செருக்கு யாவற்றுக்குமே அவருடைய மைந்தனே காரணம் என்று பெரியவர் நம்புகிறார். அதனால்தான் அவர் விலகிக் கொண்டு தம்பிக்கு முழுப் பொறுப்பும் விட்டிருக்கிறார். குலோத்துங்கரின் மரணத்துக்காக உண்மையாகவே அவர் வருந்துவார். சுந்தர பாண்டியரின் வீராபிஷேகத்தை அவர் நேரில் இருந்து நடத்தவில்லையென்றாலும் அவர் உள்ளமும் உயிரும் ஆயிரத் தனி மண்டபத்தில்தானிருக்கும்.''

பழையாறைச் சோழ மாளிகைக்கு வெளியே வீரர்களின் வாழ்த்தொலி கேட்டது. உற்றுக் கேட்டார்கள்.

''திருமுனைப்பாடி நாட்டுச் சிங்கம் வாழ்க! பல்லவர் குலத்துதித்த கடவராயக் கோப்பெருஞ்சிங்கன் வாழ்க!

# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்
இந்தியாவில் தயாரிப்பது

பாண்டியருக்குப் பெருந் துணைத் தூணாக விளங்கும் வீர சிங்கம் வாழ்க!''

வாழ்த்தொலி கேட்டவுடன் மேல் மாடக் கூடத்தில் கயல்விழியோடு உரையாடிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியன் படிகளில் இறங்கி ஓடி வந்தான். கீழ்க் கூடத்திலிருந்த விழுப்பரையர் முதலியோரும் அவனோடு சேர்ந்து கொண்டனர். அனைவரும் கோப் பெருஞ்சிங்கனை வரவேற்க வெளி வாயிலுக்கு விரைந்தனர்.

ரதத்திலிருந்த கோப்பெருஞ்சிங்கனைத் தன் இரு கரங்களாலும் கட்டித் தூக்கி நிறுத்தித் தழுவிக்கொண்டான் சுந்தர பாண்டியன். தம் விழிகளில் துளிர் விட்ட ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார் கோப்பெருஞ் சிங்கன். சுந்தர பாண்டியனின் வெற்றிக்காக அவர் மறைமுகமாக அனுப்பி வைத்த படைக் கலன்கள், ஆட்கள், பெரும் பொருள் யாவுமே அவருடைய வெற்றியாகவும் திரும்பி விட்டன.

''திருமுனைப்பாடி நாடு, பாண்டிய நாடு இரு நாடுகளுமே தன்னுரிமை பெற்று விட்டன. இன்னும் சோழ சாம்ராஜ்யத்தின் சிற்றரசர்களான வாண கோவரையர், சம்புவராயர், சேதி ராயர் அனைவருக்குமே நாம் விடுதலை அளித்து விடலாம்!'' என்றான் சுந்தரபாண்டியன்.

''தங்களுடைய இந்த மாபெரும் வெற்றிக்காகத் தங்களை வாழ்த்துகிறேன். திருமுனைப்பாடி நாட்டைச் சோழர் பிடியிலிருந்து விடுவித்ததற்காக நன்றியும் கூறுகின்றேன்'' என்றார் கோப்பெருஞ்சிங்கன்.

''வெற்றி என்னுடையதல்ல; நம்முடையது!'' என்றான் சுந்தர பாண்டியன். ''முதலில் நன்றி கூறக் கடமைப்பட்டவன் நான்தான்.''

அவர்கள் மாளிகைக்குள் நுழைந்த பின்னர் அளவளாவத் தொடங்கினர். குலசேகர பாண்டியர் அங்கு வராத காரணத்தை விளக்கி விட்டு, கோப் பெருஞ்சிங்கனிடம் விழுப்பரையர் கூறினார். ''தாங்கள்தாம் பெரிய பாண்டியரின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு இந்த வீராபிஷேக விழாவை நடத்திக் கொடுக்க வேண்டும். பெரியவருக்கும் செய்தி அனுப்பியிருக்கிறோம்.''

''அது நான் செய்த தவப் பயன்!'' என்றார் கோப்பெருஞ்சிங்கன். ''பாண்டிய நாட்டின் எல்லை காஞ்சி வரையிலும் இருக்கிறதென்று இனி நினைத்துக்கொள்ளுங்கள்.''

''அவ்வாறே திருமுனைப்பாடியின் தெற்கு எல்லையில் கன்னிக் குமரி காவல் புரிகிறாள் என்பதையும் தாங்கள் மனத்தில் கொள்ள வேண்டும். நட்பும் உறவுமே இனி நமது அடிப்படைப் பண்புகளாக விளங்கட்டும்!'' என்றான் இளைய பாண்டியன்.

''எனது குமாரத்தியைத் தங்களுக்குக் கொடுத்துப் பாண்டிய நாட்டையே இணைத்துக் கொள்ளலாமென்றால், தங்களுக்குக் கொடுக்கும் வயதில் எனக்கொரு குமாரத்தி இல்லையே என்று ஏங்குகிறேன்!'' இப்படிக் கூறி விட்டுக் கோப்பெருஞ்சிங்கன் சிரித்தார். உடன் இருந்தோரும் அந்தச் சிரிப்பில் கலந்து மகிழ்ந்தனர்.

''குமாரத்தியைக் கொடுக்காமலே குமரி வரையில் உள்ள நாட்டைத் தாங்கள் இணைத்துக் கொள்ளலாம்!'' என்றான் சுந்தர பாண்டியன். ''ஆனால் நான் ஒன்றும் கோசல நாட்டு வல்லாள தேவர் குலோத்துங்கரிடம் ஏமாந்தது போல் பெண்ணைக் கண்டு ஏமாந்து விடமாட்டேன். பெண் கொடுப்போரிடம் என்னையும் நாட்டையும் அடிமைப்படுத்திக் கொள்ள மாட்டேன்!''

மீண்டும் அங்கு சிரிப்பொலி எழுந்து அடங்கியது. கோசல சாம்ராஜ்யத்துப் பேச்சு வந்தவுடன் கோப்பெருஞ் சிங்கன் சிந்தனையில் ஆழ்ந்தார். அதைச் சுந்தர பாண்டியனும் கவனித்தான்.

''கோசல நாட்டுச் செய்தி ஏதும் கிடைத்ததா?'' என்றான்.

கோப்பெருஞ்சிங்கன் பதில் அளிக்காமல் சுற்றுமுற்றும் பார்த்தார். முக்கியமான பெருந் தலைவர்களைத் தவிர வேறு யாரும் அங்கு இல்லை. நீண்ட பெருமூச்சு விட்டார். இந்தப் பெருமூச்சின் சீற்றம் இதுவரை அங்கு நிலவிய கலகலப்பையெல்லாம் நொடிப் பொழுதில் மாற்றுவது போலிருந்தது.

''கோசல சாம்ராஜ்யம் போரில் வெற்றி பெற்று விட்டது. வல்லாள தேவரும் வீர நரசிம்மனும் வடக்கில் வெற்றிக் கொடி நாட்டி விட்டார்கள். இச் சமயத்தில் அவர்களுக்குக் குலோத்துங்கரின் ஓலையும் போயிருக்கிறது.''

''குலோத்துங்கரின் ஓலையா?'' திடுக்கிட்டனர் அனைவரும்.

''ஆமாம், விவேகம் மிகுந்த அந்த வீரர் தம்முடைய கடைசி மூச்சு விடுவதற்கு முன்பு கூடத் தம் சாம்ராஜ்யத்தைக் காப்பாற்ற முனைந்திருக்கிறார். அவர்களுக்கு ஓலை அனுப்பி, 'பாண்டிய யானைக்குச் சிங்கமாக விளங்கும் அவர்கள் எப்படியாவது பாண்டியர்களை அழித்துச் சோழர் குலத்தைக்

காப்பாற்ற வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார். இந்தப் போரில் சோழ சாம்ராஜ்யமே அழிந்தாலும் மீண்டும் அதை நிலைநாட்டும்படி கேட்டிருக்கிறார். பெண் வழி உறவு, வலிமை உள்ள உறவு. அந்த உறவைக் கோசல நாட்டார் மதிப்பவர்கள். அதிலும் ஓலை அனுப்பிய குலோத்துங்கர் இறந்து விட்டதால் இறந்தவரின் ஆவலை நிறைவேற்றுவதற்காக அவர்கள் எதையும் துணிந்து செய்வார்கள்.''

கோப்பெருஞ்சிங்கன் பேசி முடித்தவுடன் அங்கு வெகு நேரம் மௌனம் நிலவியது.

''அப்படியானால் நமது அடுத்த போராட்டம் உடனே தொடர்ந்து விட்டது'' என்றான் சுந்தரபாண்டியன். ''அதுவே நம் வாழ்வில் கடைசிப் போராகவும் இருக்கும். போரின் முடிவில் ஒன்று நாம் எஞ்சியிருப்போம்; அல்லது கோசல நாட்டார் எஞ்சியிருப்பார்கள். நம்முடைய புதிய பகைவர்கள் அறிவும் ஆற்றலும் உள்ளவர்கள். நம்மை விடப் பன்மடங்கு படை பலமுள்ளவர்கள்.''

அனைவருமே திகைத்து விட்டனர்.

''எனக்கு இப்போது வீராபிஷேகம் வேண்டாம்!'' என்றான் சுந்தர பாண்டியன்.

துணுக்குற்ற விழுப்பரையர், ''வீராபிஷேகம் தங்களுக்காக மட்டும் செய்வதல்ல. வீரர் கூட்டத்தின் மன எழுச்சிக்கும், மகிழ்ச்சிக்காகவும் செய்வது அது'' என்றார். ''பல்வேறு துன்பங்களுக்கிடையில் போராடும் நம் வீரர்களின் உள வலிமையைப் பெருக்குவதற்காகத்தான் நாம் விழாக்கள் நடத்துகிறோம். ஆடலும், பாடலும், கூத்தும், இசையும், விழாக்களும் கட்டாயம் வீரர்களுக்குத் தேவைதான். அவர்களுக்கு மன எழுச்சி வேண்டும்; இதை மறுக்காதீர்கள்.''

சுந்தர பாண்டியனை வீராபிஷேகத்துக்கு இணங்கும்படி கோப்பெருஞ்சிங்கனும் வற்புறுத்தினார்.

''அடுத்த போர் எப்போது?'' என்று கேட்டான் சுந்தர பாண்டியன்.

''அது நம்மைத் தேடி வரத்தான் போகிறது. வருமுன் உங்களுக்குச் செய்தி அனுப்புகிறேன்'' என்றார் கோப்பெருஞ்சிங்கன்.

## பதினொன்றாம் அத்தியாயம்

# பாம்புக்குப் பால் வார்த்தால்?

**ப**ழையாறைப் பதியின் ஆயிரத்தளி மண்டபத்தில் வீராபிஷேகம் நடந்தவுடன் அங்கிருந்து தில்லையம்பதிக்குப் புறப்பட்டான் சுந்தர பாண்டியன். விழுப்பரையர், கயல்விழி முதலியோரும் உடன் சென்றனர். தில்லையில் அனைவரும் 'பொன்னம்பலம் பொலியப் பூவையுடன் ஆடுவார் மன்னும் திருமேனி' கண்டு மனம் களித்தனர். கயல்விழி அதுவரையில் தன் வாழ்நாளில் கண்டறியாத பேரானந்தப் பெருக்கோடு திருச்சபையின் முன்பு நடனமாடினாள்.

மதுரைக்குத் திரும்பும் வழியில் அவர்கள் 'பூங்கமல வாவி சூழ் பொன்னமராவதி' நகருக்கு வந்தார்கள். அங்கே அவர்களது வரவு நோக்கி வரவேற்பதற்காக மதுரையிலிருந்து வந்து காத்திருந்தார் பெரிய பாண்டியர். கோப்பெருந்தேவியாரும் உடன் வந்திருந்தார்.

குலசேகர பாண்டியரின் பாதங்களில் சுந்தர பாண்டியனும் கோப்பெருந்தேவியின் பாதங்களில் கயல்விழியும் ஒன்றாக விழுந்து வணங்கினார்கள். ஆனந்தக் கண்ணீர் பொங்கியது அனைவரது விழிகளிலும். யாருக்குமே பேசுவதற்கு நா எழவில்லை.

''மதுரைக்கு நீ திரும்பும் வரையிலும் எங்களால் பொறுத்திருக்க முடியவில்லை'' என்றார் கோப்பெருந்தேவி. ''உன்னை வரவேற்பதற்கு மதுரைமாநகரம் இப்போதே விழாக் கோலம் பூண்டு விட்டது.''

கயல்விழியை அழைத்துக்கொண்டு உட்புறம் சென்றார் கோப்பெருந்தேவி. பாண்டியரிடம் நடந்த செய்திகளனைத்தையும் கூறினார் விழுப்பரையர். சுந்தர பாண்டியன் தன்னிடம் கோப்பெருஞ்சிங்கன் கூறிய கோசல நாட்டு விவரங்களையும் கூறினான். பாண்டியர் எதிர்பார்த்திருந்த செய்திதான் அது. ''வீர நரசிம்மனின் குறுக்கீடு தவிர்க்க முடியாத ஒன்றுதான்'' என்று அமைதியோடு கூறினார் பாண்டியர்.

பாண்டியர் பொன்னமராவதிக்கு வந்ததற்கு மற்றொரு நோக்கமும் இருந்தது. அதையும் அவரே கூறினார்.

''நம்முடைய அதிகாரிகள் சிலரைக் கங்கை கொண்ட சோழ புரத்துக்கு

# அகண்ட தீப கைங்கர்யத்தில் நீங்கள் பங்கு கொண்டீர்களா?

ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் அனுக்கிரஹத்துடன் உலக நலத்திற்காக
சென்னையில் 14-1-65 அன்று
கீழ்க்கண்ட தேவாலயங்களில் அகண்ட தீபங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது

1. ஸ்ரீ கச்சபேஸ்வரர் ஆலயம்
2. ஸ்ரீ காளிகாம்பாள் ஆலயம்
3. ஸ்ரீ மல்லிகேஸ்வரர் ஆலயம்
4. ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் ஆலயம்

பக்த கோடிகள் இத் தீபங்கள் என்றும் பிரகாசமாய் ஒளி வீச தங்களால் இயன்ற பொருளுதவியோ (சுத்தமான நல்லெண்ணெய்) பண உதவியோ அல்லது இரண்டுமோ செய்து, இச் சற்பணியில், பங்கு கொள்வதால் ஆயுள் வளரும், கண்கள் என்றும் பிரகாசமாய் தெரியும், செல்வம் செழித்து ஓங்கும். சகலவிதமான துன்பங்களும் அகலும். என்றும் மன அமைதி நிலவும்.

சுத்தமான நல்லெண்ணெயை டி. ஆலயங்களில் சேர்க்கவும்

பண உதவி செய்ய விருப்பமுள்ளவர்கள் அனுப்ப வேண்டிய முகவரி:

ஸ்ரீ ராம பவன் (R. S. நாராயணஸ்வாமி ஐயர்) 48, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

Space donated by 777 Brand Food Products

# ஆல்போ-ஸாங்

## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டிஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)

குணத்தில் சிறந்தவை

# ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்

அனுப்பி இராஜராஜனையும் சோழ நாட்டு அமைச்சர், படைத் தலைவர் முதலியோரையும் இங்கு அழைத்து வரச் சொல்ல வேண்டும்.''

'எதற்காக?' என்ற கேள்வி சுந்தர பாண்டியனிடம் எழுந்தது. ஆனால் அதைப் பெரிய பாண்டியரிடம் அவன் கேட்கவில்லை. ''அப்படியே ஆள் அனுப்புவோம்'' என்றான்.

''சோழ நாட்டை இழந்து நிற்கும் அவனுக்கு நாம் அவனுடைய மணி முடியையும் மாலையையும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். சோழபதி என்ற பட்டத்தையும் கொடுத்து அவனிடமே சோழ நாட்டுப் பகுதியையும் அளித்துவிட வேண்டும்.''

திடுக்கிட்டான் சுந்தர பாண்டியன். விழுப்பரையர் இதைக் கேட்டு அதிர்ச்சியுறவில்லை.

''தீமை செய்தவர்களுக்கு நாம் அளிக்கும் ஏற்ற தண்டனை அவர்களே நாணும்படியாக நன்மையைச் செய்வதுதான். வள்ளுவர் காட்டும் வழியை நாம் பின்பற்றுவோம். மேலும், இராஜ ராஜன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் அமரராகி விட்ட குலோத்துங்கருக்காக நாம் இதைச் செய்ய வேண்டும்; பாண்டிய நாட்டை அவர் பலமுறை வென்றபோதிலும் மீண்டும் நமக்கே வழங்கியிருக்கிறார். நாமும் அவ்வாறு செய்வதுதான் முறையாகும்.''

தமையனாரின் சொல்லைத் தட்டி நடப்பதென்ற நினைவே அவனிடம் எழவில்லை. என்றாலும் அவரது இந்த முடிவு பெரியதோர் அரசியல் பிழை யென்றே அவனுக்குத் தோன்றியது. அவனுடைய மௌனத்தின் காரணத்தை அறிந்து கொண்டார் பெரிய பாண்டியர்.

''சுந்தர பாண்டியா! நாம் விரும்பிய ஆட்சி உரிமையை நாம் பெற்று விட்டோம். திருமுனைப்பாடி நாடும் உரிமை பெற்று விட்டது. இனியும் நாம் சோழ நாட்டை அடிமைப் படுத்தி வைத்துப் பயன் என்ன? அதனால் வரக்கூடிய பின் விளைவுகளைத் தவிர்ப்பதற்காகவே நான் இவ்வாறு கூறுகிறேன்.''

''இப்படிச் செய்தால் கோசல சாம்ராஜ்யத்துப் படையெடுப்பு இருக்காது என்று நினைக்கிறீர்களா? அதைத் தவிர்க்க முடியும் என்று தங்களுக்குத் தோன்றுகிறதா?''

''இப்படிச் செய்தால் தவிர்ப்பதற்கு ஒரே ஒரு வாய்ப்பு உண்டு. தவிரவும் நாம் நமது பண்பைக் காக்கவே



வக்கீல்: உன் வயது என்ன?

நங்கை: உங்கள் வயது எவ்வளவோ அதேதான்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இந்தத் தியாகம் செய்ய வேண்டுமென்று நினைக்கிறேன்; தியாக விநோதரின் குமாரன் நம்மால் முடி இழந்து தவித்தான் என்ற அவச்சொல் நமக்கு வேண்டாம்.''

''தங்கள் ஆணையை நிறைவேற்றுவதே என்னுடைய கடமை; அவ்வாறே நிறைவேற்றுகிறேன்'' என்றான் சுந்தர பாண்டியன்.

''உன் மனத்தில் இன்னும் ஏதோ ஐயம் இருப்பது போல் தோன்றுகிறதே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் பாண்டியர். முழு மனத்தோடு சுந்தர பாண்டியன் இசையவில்லை என்பது அவருக்கே புலப்பட்டு விட்டது.

சுந்தர பாண்டியன் கூறினான்: ''இயற்கையாகவே நம் பாண்டிய நாட்டை விட வளம் நிறைந்தது சோழ நாடு. மேலும் அவர்கள் நமது நாட்டின் செல்வத்தையெல்லாம் படையெடுப்புக்களாலும் திறைப் பொருள்களாகவும் கொள்ளை கொண்டு போயிருக்கிறார்கள். இப்போது சோழ நாடு செல்வச் செருக்கால் சீரழிந்து வருகிறது. நம் நாடு வறுமையால் வாடி நலிகிறது. நம்மிடம் சோழ நாடு இருக்குமானால், அதனிடம் குவிந்திருக்கும் நம்முடைய செல்வத்தை நம் நாட்டுக்கே மீட்டுக்கொள்ளலாம். முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக நம்மை உறிஞ்சி வளர்ந்திருக்கிறது அது; நமது நாட்டை வளப்

படுத்துவதற்கு நமக்கும் பொருள் வேண்டும்.''

சுந்தர பாண்டியர் தமது தம்பியின் அறிவுத் திறனைத் தமக்குள்ளாகவே போற்றினர்.

''சோழ நாடு நமக்குத் திறை செலுத்தித் தீரவேண்டும் என்று ஓலை எழுதிக் கொள்வோம். நாம் பதி கொடுத்த செல்வத்தைத் திறைப் பொருளாகவே திருப்பிப் பெறுவோம்.''

அதுவே மிகச் சிறந்த யோசனையாக விழுப்பரையருக்கும் தோன்றியது. அவ்வாறே இராஜ ராஜனுக்கு ஆள் அனுப்பிக் கங்காபுரியிலிருந்து வரவழைத்தார்கள். மணிமுடியும் ஆரமும் கொடுத்துச் சோழ நாட்டையும் அவனுக்கே வழங்கினார்கள்.

**'' வாங்குசிறை அன்னம் துயிலொழிய வண்டெழுப்பும்**

**பூங்கமல வாவிசூழ் பொன்னம ராவதியில்...**

**சோலை மலிபழனச் சோணாடு தானிழந்த**

**மாலை முடியுந் தரவருக வென்றழைத்து...**

**சோளபதி யென்று நாமமுந் தென்னகரும்**

**மீள வழங்கி விடை கொடுத்து விட்டருளி....''**

**— மெய்க்கீர்த்தி.**

இராஜ ராஜன் பெரிய பாண்டியரையும் சுந்தர பாண்டியனையும் பலமுறை விழுந்து வணங்கினான். செருக்கோடு அவன் முன்பொரு முறை புலவனுகச் சென்ற இளைய பாண்டியன் மீது சீறியெழுந்தானல்லவா? பேசாதன வெல்லாம் பேசி அவனைச் சிறுமைப் படுத்தினானல்லவா? கங்காபுரி அரண்மனைக்குள் கட்டற்ற காளை போல் சுற்றித் திரிந்தானல்லவா? — 'அதே மனிதன்தானா இந்தக் கோழைப் பதர்!' என்று வியப்படைந்தான் சுந்தர பாண்டியன்.

நன்றி கொண்டவன்போல் குழைந்து பேசினான். திறைப் பொருளைத் தவறாது அனுப்பி வைப்பதாக வாக்களித்தான். தன் வாழ்நாள் முழுவதுமே பாண்டியர்களுக்கு நன்றிக் கடன் பட்டிருப்பதாகக் கூறினான்.

பொன்னமராவதியின் எல்லையை விட்டு அவனுடைய ரதம் வடக்கே செல்லும் வரையில்தான் இவ்வளவு குழைவுகளும் அவனிடம் குடிகொண்டிருந்தன. எல்லையைக் கடந்தவுடன் அவன் வாய்விட்டுச் சிரித்தான். அலட்சியமாக நகைத்துக் கொண்டே அருகிருந்த அமைச்சரிடம் அவன் பேசத் தொடங்கினான்.

''அமைச்சரே! பாண்டியர்களின் வீரத்தின் இலட்சணம் இப்போது விளங்கி விட்டது பார்த்தீர்களா? வடக்கே வீர நரசிம்மரின் வெற்றி இவர்களை நடுங்கச் செய்கிறது. அவர் வந்து பாண்டிய நாட்டை முறியடித்துவிட்டுச் சோழ சாம்ராஜ்யத்தை நிலைநாட்டி விடுவார் என்பதையும் அறிந்து கொண்டார்கள். அதற்கு முன்பாகவே தங்களின் தற்காப்புக்காக நமக்கு நாட்டை வழங்கி யிருக்கிறார்கள் கோழைகள்!''

இராஜ ராஜன் தன்னிடமிருந்த ஒப்பந்த ஓலைகளைக் கையில் எடுத்தான். திறை செலுத்துவதாக வாக்களித்துப் பெரிய பாண்டியரின் முன்பு மண்டியிட்டுப் பெற்றுக் கொண்ட ஓலைகள் தான் அவை.

ஒவ்வொன்றாகக் கிழித்து ரதத்திலிருந்தவாறே காற்றில் பறக்க விட்டான் அவன்.

**சு**ந்தர பாண்டியனுக்குக் கயல் விழியைத் தனிமையில் சந்திப்பதற்கு அப்போதுதான் நேரம் கிடைத்தது. மீண்டும் போர் மேகங்கள் சூழ்வதற்கு முன்பாகவே திருமணத்தை நிறைவேற்றி விட வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. அது பற்றி அவளிடம் பேசுவதற்காக அவள் அறையை நோக்கி விரைந்தவன், திருமுனைப்பாடி நாட்டுத் தூதுவன் வந்து வணங்கி நிற்கவே, ''என்ன சேதி?'' என்று கேட்டு நின்றான்.

''அரசர் ஓலை அனுப்பியிருக்கிறார்கள்!''

கோப்பெருஞ்சிங்கன் அனுப்பிய ஓலையைப் படித்தவுடன் அவனால் அடுத்த அடி எடுத்து வைக்க முடியவில்லை. மீண்டும் ஒரு முறை படித்தான்.

''நான் திரும்பும் வழியில் சோழ நாட்டு அரசரின் ரதம் எதிர்ப்பட்டது. அவர் ஏதோ சில ஓலைகளைக் கிழித்து எறிந்து கொண்டே சென்றார். அவற்றையும் சேகரித்து வந்தேன்.''

இராஜராஜனால் கிழித்தெறியப்பட்ட ஒப்பந்த ஓலைகள் அவை. சுந்தர பாண்டியனின் நெஞ்சில் நெருப்புப் பற்றிக் கொண்டது. (தொடரும்)

ஆயுள் இன்சூரன்சு பாலிசிதாரர்களுக்கு

# உங்களுடைய வயதை நிரூபிக்கத் தேவைப்படும் அத்தாட்சிகளை அனுப்பிவிட்டீர்களா?

உங்கள் பாலிசியில் நீங்கள் குறிப்பிட்டிருக்கும் வயதிற்குத் தேவைப்படும் சான்றினை அனுப்பும் வரை, கார்ப்பொரேஷன் உங்கள் உரிமைப் பணத்தைத் தீர்க்க இயலாமற் போகும்.

வயது நிரூபணத்திற்கு கீழ்வரும் அத்தாட்சிகளை எல். ஐ. சி. ஏற்றுக் கொள்கிறது.

■ மூல ஜாதகங்கள்

■ பிறப்பு அல்லது ஞானஸ்னான சான்றிதழ்கள்.

■ பிறந்த தேதி குறிப்பிடப்பட்டுள்ள பள்ளி, கல்லூரி, அல்லது பணியாற்றும் நிறுவனத்தின் சர்வீஸ் ரிகார்டுகளிலிருந்து எடுக்கப்பட்ட சான்றிதழ்கள்.

உங்கள் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசியை இன்றே பரிசீலித்துப் பாருங்கள். உங்கள் வயது நிரூபணத்திற்குத் தேவைப்படும் அத்தாட்சியினை இதுவரை அனுப்பியிருக்கவில்லையென்றால் உடனே ஆவன செய்யுங்கள். மற்றும், உங்கள் இன்சூரன்சுப் பிரீமியத்தை உரிய காலத்தில் செலுத்தி வர எப்பொழுதும் நினைவு கொள்ளுங்கள்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ்**
**கார்ப்பொரேஷன்**
**ஆப் இந்தியா**



வயதை நிரூபிக்க அத்தாட்சிகள் இல்லாத காரணத்தால் கடந்த ஆண்டில் (1964 மார்ச் 31 முடிய), 3,166 பாலிசிகளின் உரிமைகள் தீர்க்க இயலாமற் போயின.

# சிரிக்கவும் சிந்திக்கவும்



பஸ்ஸில் தாயின் பக்கத்தில் குழந்தை உட்கார்ந்திருக்கிறான். கண்டக்டர் "இந்தப் பிள்ளைக்கு டிக்கெட்" என்று கேட்கிறார். "இதற்கு எதற்கு டிக்கட்? இந்த மார்கழிக்குத்தானே இரண்டே முக்கால் முடிந்தது?" என்கிறாள் தாயார்.

"இதற்கு இரண்டே முக்கால்தானா ஆகிறது? இது இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஆகியிருக்குமே!" என்கிறார் கண்டக்டர்.

"இல்லையே. மூன்று வருஷங்களுக்கு முன்னால் தானே அரசப் பிரதட்சிணம் செய்து பிறந்தான்!"

இந்தத் தர்க்கவாத வேடிக்கையை மற்றப் பிரயாணிகள் கவனித்து அனுபவிக்கிறார்கள். ரயில் பிரயாணத்தின்போதும் இதே தகராறு தான். மனித சுபாவம் என்னவென்றால், மடியில் உட்கார வைத்துக் கொள்ளக் கூடிய சிறுவர்களுக்கு டிக்கெட் வாங்குவது மகா பாபம் என்பதாகும்.

டிக்கெட் வாங்குவதற்காகக் குழந்தைகள் வயதை நிரூபிக்க யாரும் ஜாதகத்தைக் கையிலெடுத்துக் கொண்டு போவதற்கில்லை. உயர்தர மன்ற நீதிபதிகளின் ஜாதகங்களை நம்பத்தகாதவையா யிருக்கும்போது பஸ் பிரயாணி கொடுக்கும் ஜாதகத்தைக் கண்டக்டர் ஒரு நாளும் நம்ப மாட்டார்.

திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள் இந்த வயதை நிர்ணயிக்க ஒரு குறுக்கு வழி கண்டுபிடித்திருக்கிறார்கள். மூன்று அடி உயரத்துக்கு உட்பட்டவர்களுக்கு டிக்கெட் கிடையாது. நான்கு அடி உயரத்துக் குட்பட்டவர்களுக்கு டிக்கெட் உண்டு என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். உயரத்தை அளப்பதற்காக டிக்கெட் விற்கும் இடத்தில் மட்டப் பலகைகள் வைத்திருக்கின்றனர். இம்முறையை ரயிலிலும் பஸ்ஸிலும் பின்பற்றலாம்.

டிக்கெட் கலெக்டர்களும், பஸ் கண்டக்டர்களும் கையில் ஓர் அளவுகோல் நாடாவைத் தையற்காரர் தோள் மீது போட்டுக்கொண்டிருப்பதைப் போல் போட்டுக் கொண்டிருக்க வேண்டும். வயது சம்பந்தமாகச் சந்தேகம் ஏற்படும்போது உடனே உயரத்தை அளந்து பார்க்கலாம்.

நான்கு அடி உயரத்துக்குட்பட்டவர்களுக்கு 'அரை டிக்கட்' என்னும்போது பிரதமர் சாஸ்திரியின் ஞாபகம் வருகிறது. அவர் இந்த நான்கு அடி உயர விதிப்படி ஓர் அரை டிக்கெட் பிரயாணி ஆவார் என்று நினைக்கிறேன். அரசியலில்கூட அப்படித்தானே நடந்து கொள்ளுகிறார். எது விஷயத்திலும் பொறுப்பேற்றுக் கொள்ளாமல், எதைப் பற்றியும் நிர்ணயமாக அடித்துச் சொல்லாமல் பதவியிலிருந்து வருகிறார்!

※ ※ ※

'லட்சுமிபுர யுவர்கள் சங்கம்' என்ற பெயர் பத்திரிகை வாசகர்களின் கண்களில் குறைந்தது மாதம் இரண்டு முறையாவது பட்டுக் கொண்டிருக்கும்.

"மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் கழுத்தில் ஓர் அங்கவஸ்திரத்தைச் சுற்றிப்போட்டுக் கொண்டு கையில் தடியை எடுத்துக்கொண்டு மாலை வேளையில் கால் நடையாக நடந்து சென்றால், அதுஅநேகமாக 'லட்சுமிபுரம் யுவர்கள் சங்கத்துக்குப் போவதற்காகத்தான்" என்று கல்கி அவர்கள் அதன் பெயரைச் சிறப்பித்து எழுதியிருக்கிறார்.

இந்தச் சங்கத்தைப் பார்க்க வேண்டும் என்று கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக எனக்கு ஆசை. அது சென்ற வாரம் நிறைவேறியது. அந்தச் சங்கம் இருக்கும் தெருப்பக்கமாகப் போக நேர்ந்த போது உள்ளே ஜனங்கள் கூடியிருந்தார்கள். நானும் சென்றேன். இஸ்ரேல் நாட்டு இந்தியக் கான்ஸலேட் ஜெனரல் ஸ்ரீ காரி டன் அவர்கள் 'இன்றைய இஸ்ரேல்' என்ற விஷயத்தைப் பற்றிப் பேசவிருந்தார். ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்கார் தலைமை வகித்தார்.

இந்தச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ கே. எஸ். ராமசாமி சாஸ்திரி அவர்கள். அன்று அங்கே கூடியிருந்தவர்களுள் பெரும்பான்மையோர் பேரன், பேத்தி, கொள்ளுப் பேரன் பேத்தி உள்ளவர்கள். ஆனால் மனத்தால் இளைஞர்கள்தான்!

நல்ல இலக்கிய ஞானமும், அரசியல் ஞானமும், பழுத்த உலக அனுபவமும் உள்ளவர்களே இதில் அநேகமாகப் பிரசங்கங்கள் புரிகிறார்கள். நாட்டின் ஒவ்வொரு சிக்கலான பிரச்னையும் இந்தச் சின்னஞ் சிறிய ஹாலின் மேடையில் நன்றாக அலசப்படுகிறது. பல கட்சியினரும் இங்கே பேசுகிறார்கள். மனம் போனபடி பேசுபவர்கள்கூட நாசூக்காகவும், கட்டுப்பாட்டுடனும் பேசுகிறார்கள். இது வயோதிக யுவர்கள் சங்கம் என்றாலும், அதன் வாலிபத் தன்மையை எடுத்துக் காட்டுவதற்காகவோ என்னமோ, சுதந்திர தினத்தன்று ஒரு யுவதியைத் தேசியக் கொடி ஏற்றச் செய்கிறார்கள். அதுவும் சினிமா நடிகையான யுவதி!



# என்ன பேரோ?



நிலவொளி (படிக்கிறார்): அரகரா, அக லிகை, அருந்ததி, இராணி, இராதா... 'ஈ' யிலே எதுவும் இடையாது போலிருக்கு... உமா, உஷா, ஊர்மிளா; எமிலி, பங்கஜம், ...பிரியம்வதா.

பொன்னுத்தாய்: பிரசென்ட் ஸார்! ஆஜர்! வந்துள்ளேன் ஐயா!

நிலவொளி: பிரசென்ட் ஸாராவது, ஆஜராவது! என்னே என்ன பள்ளிக்கூட வாத்தியார்னு நெனச்சியா?

பொன்னுத்தாய்: பொழுது விடிந்ததும் விடியாததுமாய் ஒரு மனுஷர் பெயர்களாகப் படித்துத் தள்ளினால், அவர் ஏதோ ஆஜர் பதிவுப் புத்தகத்திலிருந்து படிப்பதாகத் தானே எண்ண வேண்டியிருக்கிறது?

நிலவொளி: ஏன், பைத்தியம் புடிச்சிருக்குன்னு நெனைக்கக் கூடாதோ? மேலே படிக்கிறேன் கேளு... மாதுரி, மாலதி, மாலினி.

பொன்னுத்தாய்: போதும்! போதும்! இதெல்லாம் என்ன?

நிலவொளி: அத்தனையும் பெயர்கள்! அருமையான பெயர்கள்! நம் குழந்தைக்கு இதிலிருந்துதான் பொறுக்கிப் பெயர் வைக்கப் போகிறேன்.

பொன்னுத்தாய்: இதென்ன கூத்து? எங்கிருந்து உங்களுக்கு இத்தனை பெயர்கள்?

நிலவொளி: அதுவா? பத்திரிகையிலே புது விதமான ஒரு விளம்பரம் தந்தேன். நம் குழந்தைக்கு நல்ல பெயராக வைப்பவர்களுக்கு ஒரு பரிசு தருவதாக! குழந்தை பெண் என்று குறிப்பிட மறந்து விட்டேன். ஆயிரக்கணக்கான பெயர்கள் வந்து குவிந்திருக்கின்றன. அவற்றில் ஆண் பெயர்களை அப்பாற்படுத்தி, மற்றப் பெயர்களை அகர வரிசையில் அடுக்குவதற்காக ஒரு தனிக் குமாஸ்தா வேறு நியமித்திருக்கிறேன்.



பொன்னுத்தாய் (முந்தானையால் கண்ணைத் துடைத்தபடி): நீங்க பண்ணியிருக்கிறது கொஞ்சம்கூட நன்றாயில்லே; எங்க பாட்டி தன் பெயரைத்தான் குழந்தைக்கு வைக்கணும், அதற்குப் பிறகுதான் நிம்மதியாகக் கண்ணை மூடணும்னு காத்துக்கிட்டிருக்கிற போது நீங்க இந்த மாதிரி.....

நிலவொளி: 'பாட்டிப் பிரச்னை' தலைதூக்கும்னு எதிர்பார்த்துத்தானே முன்கூட்டியே இவ்வாறு செய்திருக்கிறேன். நீயே யோசிச்சுப் பார்... பேயாத்தா என்ற பெயர் நல்லாவா இருக்கு? நாளைக்கு நம்ம பெண் ஒரு பிரபல நட்சத்திரமாக மாறினாலும் மாறுவாள்.... அப்பொழுது பேயாத்தா என்று பெயரிருந்தால் என்னமா பொருந்துமான்னு கற்பனையைக் கொஞ்சம் ஓட்டிப் பாரேன்.

பொன்னுத்தாய்: பேயாத்தாங்கற பெயருக்கு என்னங்க குறைச்சல்?

நிலவொளி: இதோ பார் பொன்னு: சினிமாவிலே சேருவதற்கு முன்னால் ரயிலடியில் சாம்பார் சாதம் வித்துக்கிட்டிருந்தேனே அந்தக் காலத்திலே என் பெயர் என்ன தெரியுமா? அமாவாசை. அமாவாசைங்கற பெயரோடே நான் சினிமா உலகிலே நுழைஞ்சிருந்தா என் வாழ்க்கை ஒரே இருட்டாகத்தான் மாறியிருக்கும். இவ்வளவு பெயரும் புகழும் எனக்கு நிச்சயம் கிடைத்திருக்காது. முன்யோசனையுள்ள டைரக்டர் ராவ் என் பெயரை நிலவொளின்னு மாற்றினார். உடனே என் உடம்பெல்லாம் குளுகுளுன்னு மாறிச்சு. முகத்திலே கூட ஒரு புதுக் களை தோன்றிற்று.

பொன்னுத்தாய்: நீங்க சொல்றீங்க இப்படி. உங்களைக் கண்டெடுத்து சினிமா உலகத்துக்கு அளித்த குருநாதர் என்ன சொல்றார் தெரியுமா? நீங்க பெயரை மாற்றிக் கொண்டிருக்கவே கூடாதுன்னு.

நிலவொளி: அவர் அப்படித்தான் சொல்வார். ஜாம்பவான் காலத்து மனுஷ





ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்

**கதாபாத்திரங்கள்:**

**நிலவொளி :**
ஒரு சினிமா நடிகர்

**பொன்னுத்தாய் :**
அவர் மனைவி

**குருநாதர் :**
நிலவொளியைச் சினிமா உலகத்துக்கு அறிமுகப் படுத்திய பழம் பெரும் நடிகர்.

**தங்கப்பா :**
கவிஞர், பின்னணிப் பாடகர்

**பேயாத்தா :**
பொன்னுத்தாயின் பாட்டி.

ளுச்சே! இப்பக்கூடக் குழந்தை பிறந்திருக்குன்னு தெரிஞ்சால் அரை டஜன் கர் நாடகப் பெயர்களோடே ஆஜராகி விடுவார். நடிப்பிலிருந்து ரிடையரான பிறகு கண்ட கண்ட குழந்தைகளுக்கெல்லாம் அசிங்கமான பெயர்கள் சூட்டுவதுதான் அவர் 'ஹாபி'... அவர் எங்கேயாவது வந்து தொலைந்தால் அவர் பேச்சைத் தட்ட முடியாதே... சாம்பார் சாதம் விற்றுக்கிட்டிருந்த என்னை ஒரு பிரபல குணச்சித்திர நடிகனாக மாற்றினது அவர்தானே?

[ மிகப் பெரிய கிராமபோன் ஒன்றையும், முப்பது இஞ்ச 'ரெகார்டை'யும் சுமந்தபடி சில வேலையாட்கள் நுழைகிறார்கள். பின்னால் வாசனைப் பாக்கு மணக்க, வைரக் கடுக்கன், மோதிரம் ஜொலிக்க, சில்க் ஜிப்பா காற்றில் பறக்க வருகிறார் பின்னணிப் பாடகர் தங்கப்பா.]

தங்கப்பா: அண்ணாச்சி, வணக்கம்.

நிலவொளி: வாங்க, வாங்க. உட்காருங்க.

தங்கப்பா: அண்ணாச்சிக்கு ஒரு 'சர்ப்ரைஸ்' வைத்திருக்கிறேன். என் சொந்தக் குரலிலே பாடட்டுமா, இல்லே, 'ரெகார்டை'ப் போட்டுக் காட்டட்டுமா?

நிலவொளி: 'ரெகார்டையே போடுங்க... முதல்லே நீங்க காப்பி சாப்பிடுங்க.

தங்கப்பா: அண்ணாச்சிக்குக் குழந்தை பிறந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டதும் என் உள்ளம் ஒரு துள்ளுத் துள்ளிச்சிங்க. சரஸ்வதி கருணையிலே ஓர் அருமையான பாடலே தோன்றிச்சுங்க. உடனே அதைப் பதிவு செய்து எடுத்து வந்துட்டேனுங்க.

நிலவொளி: நீங்கதான் பிறவிக் கவிஞராச்சே! உங்களுக்குப் பாடல் தோன்றக் கேட்கணுமா? சரஸ்வதி தேவிதான் காத்துக் கிட்டிருக்காளே மதுரமான வார்த்தைகளாகப் பொறுக்கித் தர.... டேய் யாரங்கே? ஐயாவோட பாடலைப் போட்டுக் காட்டுங்கடா. நல்ல தமிழ் கொஞ்சம் காதில் விழட்டும்.

[ கிராமபோன் கீதம் இசைக்கிறது.]

**கேளப்பா குழந்தைக்குப் பெயர் இன்னதென்று ராஜப்பா, ரமணப்பா வேண்டாம். சொல்வேன் தன்னப்பா தரணியிலுள் 'தலைவன்ட்' பெயர்களை தர்மப்பா என்றே அழை இப்பாலகனை**

நிலவொளி: பாட்டு பிரமாதம் போங்கள். என்ன இனிமை! என்ன கருத்தாழம்! சொற்களில்தான் எவ்வளவு உயிர்! தமிழ் மணம் என்னமா கமழ்கிறது!

தங்கப்பா: எல்லாம் அண்ணாச்சியோட்டமிருக்கும் பெரியவர்களின் ஆசீர்வாதம்தான்!

நிலவொளி: தர்மப்பா என்ற பெயரில் தேன் சொட்டுகிறது... ஆனால் நாங்கதான் குடுத்து வைக்கலே...இங்கே பிறந்திருக்கிறது பெண் குழந்தையாச்சே!

தங்கப்பா: அடடா! தெரியாமல் போச்சே! தெரிந்திருந்தால் தர்மப்பாவைத் தர்மாம் பான்னு மாற்றியிருப்பேனே.

நிலவொளி: அப்படிச் செய்தால் எதுகை மோனை யெல்லாம் எடக்குப் பண்ணும். கேளப்பான்னு பாட்டைத் தொடங்கினால் தர்மப்பான்னு முடிச்சாத்தானுங்க அழகாயிருக்கு. தவிர... இதெல்லாம் சரஸ்வதி தேவியின் அருள் வாக்காச்சே. மாறுதல் செய்வது பெரிய தவறு. நல்ல பாடல் வீணாகப் போறதேன்னு எனக்கு எவ்வளவு கஷ்டமா இருக்கு தெரியுமா?

பொன்னுத்தாய்: எனக்கு ஒரு யோசனை தோணுறதுங்க. பக்கத்து வீட்டு நடிகர் பாப்பையாவின் மனைவி கூடக் குளிக்கலேன்னு கேள்வி. அவங்க குழந்தைக்குத் தர்மப்பான்னு பெயர் வச்சால் என்ன?.., நல்ல பாடல் வீணாகக் கூடாதேன்னுதான் சொல்றேன்.

தங்கப்பா: அவருக்குப் பிள்ளைதான் பிறக்கும்னு என்ன நிச்சயம்?

நிலவொளி: நடிகர் சிவலோகத்தின் மனைவி கூட....

தங்கப்பா: அவருக்கு ரெட்டை பிறந்து எத்தனே நாளாவுது? மயில் குயில்ன்னு பெயர்கூட வைச்சாச்சு.

நிலவொளி: தம்பி, நீங்க கவலைப்படாதீங்க! உங்க பாடல் வீணுகாமல் பார்த்துக் கொள்வது என் பொறுப்பு. ஊரிலிருக்கிறவன் என்னதான் குடும்பக் கட்டுப்பாடுன்னு கரடியாக் கத்தட்டும், இங்கே அடுத்த வருஷம் பிறக்கப் போறது ஒரு ராஜாப் பயல் தான். அவனுக்கும் பெயர் தர்மப்பாவே! கிராமபோனையும் பிளேட்டையும் என்னிடமே விட்டுச் செல்லுங்கள்.

தங்கப்பா: நன்றி. வரேனுங்க.

(வெளியேறுகிருர்)

நிலவொளி: ஒருவிதமாகத் தொலைந்தான் ஆசாமி. இந்தப் பிளேட்டை எங்கேயாவது விறகு அறையில் பத்திரமாக வை. தேள் கடித்தால் கிராமபோன் பிளேட்டைத்தான் அரைத்துப் போடணுமாம்...

[டெலிபோன் மணி அடிக்கிறது.]

பொன்னுத்தாய்: டெலிபோன் அடிக்கிறதைப் பார்த்தால் யாரோ புதுப் பெயர் சொல்வதற்காக அழைப்பது போல் படுகிறது.

நிலவொளி (டெலிபோனில்): ...மதுர சேனைகையா! நல்ல பெயர்தான்...நன்றி... ஆனால் பெயர் வைக்க முடிக்கட்டோமே! ....என்ன பெயரா? என்ன பெயரா? உம்... உம்... அதிலேதான் 'சஸ்பென்ஸ்'. சாயங்காலம் இந்தப் பக்கம் வந்தால் சொல்றேன்.

பொன்னுத்தாய்: யாருங்க?

நிலவொளி: நடிகை நிரஞ்சன மாதவி. குழந்தைக்கு மதுர சேனைகன்னு பெயர் வைக்கச் சொல்கிறள்.

பொன்னுத்தாய்: மதுர சேனைன்னு சொல்லாமல் போனுளே... ஆமாம், நீங்க என்ன சொன்னீங்க? 'ஆஹா, அருமையான பெயர்'னு பல்லிளிச்சிருப்பீங்க. அவளைக் கண்டால்தான் உங்களுக்குத் தலை கால் தெரியாதே.

நிலவொளி: நீ பாட்டுக்கு ஏன் இந்த மாதிரி அலட்டிக் கொள்கிறாய்?... வேறே பெயர் வைச்சாச்சுன்னு ஒரே போடாகப் போட்டேனே, அது காதில் விழவில்லையா?

[ வாக்கிங் ஸ்டிக் சத்தம். குருநாதர் உள்ளே நுழைகிருர்.]

குருநாதர்: ஏண்டா அமாவாசை.... உனக்குக் குழந்தை பிறந்திருக்காமே! மரியாதைக்கு ஒரு வார்த்தை சொல்லியனுப்பக் கூடாதா?

நிலவொளி: இப்ப உங்க வீட்டுக்குத் தானுங்க கிளம்பிக்கிட்டிருந்தோம். அதுக்குள்ளே நீங்களே வந்துட்டீங்க.

குருநாதர்: என்ன பொன்னு... இவன் சொல்றது நிஜமா? 'ரூப்' விடறதிலே எமகாதகனுச்சே! சாம்பார் சாதம் வித்துக்கிட்டிருந்த காலத்திலே இவனுக்கு அதிர்வேட்டுப் புளுகன்னு பெயர். ஆமாம், குழந்தைக்கு என்னடா பேர் வச்சே? நிலவொளி, பால் கலை, தேன் ருசின்னு எதுனுக்கும் வைக்கடாதே.

பொன்னுத்தாய்: நீங்கதானுங்க இவருக்கு அந்த விஷயத்திலே புத்தி சொல்லனும். நாகரிகப் பெயர்னு சொல்லி என்ன நாராசத்தை வைப்பாரோன்னு பயமா இருக்கு.

குருநாதர்: இவனைப் பெயர் வைக்க விட்டால்தானே அந்தக் கஷ்டம்? அதற்குத் தான் நான் இருக்கிறேனே. நடிப்பை விட்ட நாளிலிருந்து எனக்கு இதே ஜோலிதான். ஆதியிலே எல்லாம் தெய்வங்களின் பெயர்களா வச்சிக்கிட்டிருந்தேன். அப்புறம் இயற்கைக் காட்சிகள் இப்படி... இப்பவெல்லாம் சிவப்பு இந்தியர்கள் கையாளும் முறையைத்தான் கையாளுகிறேன்.

நிலவொளி: அது என்னுங்க? சிவப்பு இந்தியர்கள் எப்படிப் பெயர் வைப்பார்கள்?

குருநாதர்: குழந்தை பிறந்தவுடன் முதல் முதலில் எது கண்ணில் படுகிறதோ அது தான் அந்தக் குழந்தையின் பெயர். ரயில் கண்ணில் பட்டால் ரயில். ஈயச் செம்பு கண்ணில் பட்டால் ஈயச் செம்பு.

நிலவொளி: ரொம்பப் புதுமையான முறையாச்சே இது! தவிர, பெயர்களுக்குப் பஞ்சமே வராதே!

குருநாதர்: நான்கூட இதே முறையைத் தான் இப்பொழுது கையாளப் போகிறேன். அடுத்தபடியாக என் கண்ணில் எது படுகிறதோ, அதன் பெயர்தான் உன் குழந்தைக்கு.

[ பேயாத்தா பிரவேசம்.]

பேயாத்தா: சரியான சமயத்தில் வந்து சேர்ந்தேன். குழந்தை நீர்க்காயுசா இருக்கணும்!

நிலவொளி: பாட்டியா? நீங்க எங்கே வந்தீங்க?

குருநாதர்: இதெல்லாம் என்ன கேள்வி? போடா... போய்ப் புரோகிதரை அழைத்து வா....குழந்தைக்குப் பாட்டியின் பெயரை இடுவோம்.... உம்... சீக்கிரம் போ. நான் போய் இன்னும் நாலு குழந்தைகளுக்குப் பெயர் வைத்தாகணும்.

[ நிலவொளி போகிருன்.]

பொன்னுத்தாய்: நீங்க பண்ணின உதவியை ஒரு நாளும் மறக்க மாட்டேனுங்க. பத்திரிகையிலே பெயருக்காக விளம்பரம் பண்ணி இவர் அக்கப்போர் பண்றது தெரிஞ்சும் தெரியாததுமாதிரி நடிக்க உங்களுக்கு ஆள் அனுப்பினேனுங்க. நீங்க ஒருத்தர் சொன்னால்தானுங்க இவர் சரிம்பாரு.— எதிர்த்து வாயாட மாட்டார்.

குருநாதர்: நான் ஆடின நாடகத்தை நினைத்தால் எனக்கே சிரிப்பு வருகிறது. அந்தக் காலத்து மேடையிலேகூட இவ்வளவு ஜோராக நான் நடித்தது கிடையாது. பாட்டியையும் கையோடே அழைத்து வந்து கதவுக்குப் பக்கத்திலே நிக்கவச்சு 'டனார்'னு நாடக பாணியிலே உள்ளே நுழைய வச்சதற்கு எனக்கு நானே 'சபாஷ்' போட்டுக் கொள்ளப் போகிறேன்....அடுத்த தடவை என்ன பெயர் வைக்கணும்னு இப்பவே சொல்லிவிடு......அதற்கான ஏற்பாடுகளைச் செய்து விடுகிறேன்!

— திரை —

# விட்ட மேஜை

எதனாலும் இட்டு நிரப்ப முடியாத ஒரு மகோன்னத சாம்ராஜ்யத்தின் அழிவைக் கண்டு என் கண்ணிமையில் இரண்டு துளிகள் நழுவின. இது ஒரு வாசகனின் பவித்திரமான சன்மானங்கள். அழிவின் சரித்திரத்தை அழியாத எழுத்துக்களால் வடித்துள்ளார் ஆசிரியர். 'போர்க்களம் வீரனுக்குப் பூட்டிய ஆபரணங்களோடு வந்திருக்கிறேன் ஆயிஷா!' என்ற வேங்கடாத்திரியின் வீர வாசகம் கௌசிகனின் கற்பனை நயத்தையல்லவா காட்டுகிறது! பேச்சு முடிந்த பின்னும் பேச வைக்கும் திறன் அவர் எழுத்துக்கு இருக்கிறது.

சென்னை — 18

28–1–65 — வாசகன்

ஃ ஃ ஃ

31-1-65 இதழில் முடிவடைந்த 'பாமினிப் பாவை' சரித்திரச் சான்றுகளுடனும், இலக்கிய வளத்துடனும் கற்பனை நயத்துடனும் கூடி எங்களை உணர்ச்சிவசமாக்கி விட்டது. பாமினி சுல்தான்கள் விஜயநகரத்தைச் சின்னாபின்னமாக அழித்து விட்டாலும் எங்கள் நெஞ்சத்தில் அதன் பல்வகைச் சிறப்புக்களும் நீங்கா திருக்கும்படி எழுதியுள்ளார் ஆசிரியர், கௌசிகன் அவர்கள்.

காரைக்குடி

28–1–65 — பத்மாமணி

ஃ ஃ ஃ

கடைசி மூன்று வாரங்களாகப் 'பாமினிப் பாவை' யில் வரிக்கு வரி எழுத்துக்கு எழுத்து தேன் சொட்டியது. மகாமண்டலேசுவரர் ராமராயரைப் பற்றி ஆசிரியர் எழுதியுள்ளதைப் படிக்கும் போது அவர் அந்தக் காலத்தில் நேரே இருந்து எல்லாவற்றையும் பார்த்தது போல அத்தனை தத்ரூபமாக எழுதி இருக்கிறார்.

சென்னை — 5

28–1–65 — பி. சரஸ்வதி

ஃ ஃ ஃ

தங்கள் கல்கி வாரப் பதிப்பில் கௌசிகன் அவர்கள் எழுதிய 'பாமினிப் பாவை'யைப் படித்தபோது மகாபாரதக் கதை நினைவுக்கு வருகிறது. திரௌபதியின் அண்ணா சாட்சாத் பகவான். பாமினியின் அண்ணா மானிடன். இதுதான் வித்தியாசம். பாமினி 'அண்ணா, அண்ணா!' எனக் கூவும் ஒலி இன்னும் என் காதுகளில் ஒலிக்கிறது.

மைசூர்

29–1–65 — விஜயகுமாரி

ஃ ஃ ஃ

'பாமினிப் பாவை' குறுகிய நாவலெனினும் கம்பீரமான கதையமைப்பை, எழிற்றமிழ்ச் சொற்களால் மென்மையாகக் கொண்டு நின்றது. கௌசிகனுக்கு எமது வாழ்த்துக்கள். தங்கட்கு எனது நன்றிகள்.

சென்னை — 34

29–1–65 — ஞ. அமலன்

ஃ ஃ ஃ

திரு கௌசிகன் அவர்கள் எழுதி வந்த சரித்திர நவீனமாகிய 'பாமினிப் பாவை' சிறந்த இலக்கியப் படைப்பு. ஆரம்பம் முதல் இறுதி வரை இனிமை குன்றாமல் விறுவிறுப்புடன் அமைந்திருந்தது. வேங்கடாத்திரியையும் இராமராயரையும் என்றும் நின்று நிலைக்கும் அமரர்களாக உருவாக்கி இருப்பது மிக மிகச் சிறப்பாகும். இந்நாவலுக்கு அற்புதமான ஓவியங்களை அளித்த ஓவியர் வினு அவர்களுக்கும், ஆசிரியர் கௌசிகன் அவர்களுக்கும் மனமார்ந்த பாராட்டுக்கள்.

வெல்க, தமிழ் இலக்கியம்!

இந்துநகர், உதகை

29 – 1 – 65 — சேஷய்யன்

ஃ ஃ ஃ

இந்த வாரம் நான் 'பாமினிப் பாவை'யைப் படித்து முடிக்கும் போது இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டேன். கதையைப் படிப்பது போலவே தோன்றவில்லை. நாமும் நேரில் இருந்து அனுபவிப்பது போல இருந்தது. விறுவிறுப்பான இக்கதை முடிந்துவிட்டதே என்று நினைத்தேன். ஆனால் எக்கதையானாலும் அதற்கு ஒரு முடிவு உண்டல்லவா? ஆசிரியர் கௌசிகன் அவர்களுக்கும் வெளியிட்ட தங்கள் பத்திரிகைக்கும் எனது நன்றி.

திருமுல்லைவாசல்

30–1–65 — எஸ். சுவாமிநாதன்

ஃ ஃ ஃ

இந்தக் கதையைப் படிக்கும் பாக்கியம் பெற்ற எவருக்கும் 26ம் அத்தியாயம் படித்தவுடன் கட்டாயம் உடனடியாக மேலே படிக்க முடியாதபடி அவர்கள் கண்கள் குளமாகி விடும். ராமராயர் அவர்கள் இதயத்தில் பாய்ந்த கத்துவாள் படிப்பவர்கள் தங்கள் இதயத்திலும் அது பாய்ந்த மாதிரி ஒரு அனுபவத்தைப் பெறுவார்கள். கௌசிகன் நடையில் ஒரு தனிச் சிறப்பு இருக்கிறது. சுருங்கச் சொன்னால் இந்தக் கதையில் ராமராயரை ஆசிரியர் எவ்வளவு கம்பீரமாகப் படைத்திருக்கிறாரோ அவ்வளவு கம்பீரம் ஆசிரியர் நடையில் இருக்கிறது.

சென்னை–24

26–1–65 — டி.ஏ. சீனிவாசன்

ஃ ஃ ஃ

இதுகாறும் ஆசிரியர் 'கௌசிகன்' எழுப்பிய கற்பனைக் கலைக் கோயில் உள்ளத்தைத் தொடும் வகையில்



முடிவடைந்துள்ளது. கதாசிரியரின் அழகிய சொல்லாட்சியும், வர்ணனைகளில் அவர் கையாண்டுள்ள சிக்கனத்தோடு கூடிய சீரிய கட்டுக்கோப்பும் சிந்தனைய ஈர்த்தன.

புதுதில்லி

29—1—65 என். ராஜாமணி

* * *

தென்னகத்து வரலாற்றுக் கதைகளையே படித்து வந்த என் போன்ற வாசகர்களுக்கு விஜயநகர சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக் கதை உற்சாகத்தையும் ஆர்வத்தையும் ஊட்டியது. ஆசப்கானையும், ஆமினாவையும், வேங்கடாத்திரியையும் உயிர் கொண்டவர்களாக நேரில் காட்டிய ஓவியர் 'வினு' அவர்களுக்கு என்னு இதயங்கனிந்த பாராட்டுக்கள்:

மாமல்லபுரம்

28—1—65 கோவி. பரஞ்சோதி

* * *

'ஒரு புத்தகம் அதை எழுதியவனுடைய இதயத்திலிருந்து வந்திருந்தால் நிச்சயம் அது மற்றவர்களுடைய இதயத்தைத் தொடும்' — கார்லைல். இக்கூற்று முற்றிலும் உண்மை என்பதை நான் 'பாமினிப் பாவை' படித்தபின் உணர்ந்தேன். திரு கௌசிகனின் நடையே அலாதிதான். விஜயநகர சாம்ராஜ்யத்தின் சீரையும் சிறப்பையும் புகழ்ந்துரைத்த ஆசிரியருக்கு எப்படித்தான் அதன் அழிவைக் கொடூரமாக எழுத மனம் வந்ததோ ?

காஞ்சிபுரம்

27—1—65 க. உப்பிலி அப்பன்

* * *

'பாமினிப் பாவை' தொடர் கதையில் முஸ்லிம்களின் மனத்தைப் புண்படுத்தும் வகையில் சில விஷயங்கள் உள்ளன.

ஏராளமான முஸ்லிம்களை வாசகர்களாகக் கொண்டுள்ள 'கல்கி'யில் இத்தகைய விஷயங்கள் இடம் பெறுவது எங்களை வியப்பில் ஆழ்த்துகிறது.

உலகம் முழுவதிலும் உள்ள ஆயிரக்கணக்கானோர் படித்து மகிழ வெளி வரும் பத்திரிகை என்பதாகக் 'கல்கி' அடைந்துள்ள சிறப்புக்கு ஏற்றதாக இது அமையவில்லையே.

கொழும்பு காரியதரிசிகள்,

24—11—64 மூர்களின் இஸ்லாமிய கலாசார சங்கம்

[ஆரம்ப நாள் முதலே இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டு வரும் பத்திரிகை 'கல்கி' என்பது அனைவரும் அறிந்ததே. கதையைப் படித்த முஸ்லிம் சகோதரர்கள் ஒருவருக்கேனும் மனத்தாங்கல் அடைந்திருந்தால் அதற்காக வருந்துகிறோம். இந்து முஸ்லிம் ஒற்றுமை குலைந்திருந்த ஒரு சரித்திர காலம் கதையின் நிலைக்களனாக அமைந்திருப்பதால், கதாபாத்திரங்களின் வாயிலாக இரு தரப்பாருமே சில தருணங்களில் குறைத்துக் கூறப்படுவது இயல்பு. அதனால் கதாசிரியரோ அல்லது கல்கி பத்திரிகையோ எந்த ஒரு மதத்தவரையும் எதிர்ப்பதாக ஆகாது. கதையின் முடிவில் இந்து முஸ்லிம் ஒற்றுமையே வலியுறுத்தப்பட்டிருப்பதை வாசகர்கள் கவனித்திருப்பார்கள். —ஆசிரியர்]

## நாடு பிளவுபடும்

சுதந்திரம் என்பது ஒரு கட்சிக்கும் அல்லது பெரும்பான்மையானவர் ஒரு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கும் மாத்திரம் சொந்தமல்ல. எல்லோருக்கும், எல்லா பாகத்தில் வசிப்பவர்களுக்கும் பொதுவானது. எல்லோருக்கும் சம உரிமையும் உண்டு. இந்தி ஆட்சி மொழியாக வேண்டும் என்று வட நாட்டில் உள்ளவர்கள் எவ்வளவு உற்சாகத்துடன் வரவேற்கிறார்களோ அதைவிட அதிக உற்சாகத்துடன் ஆங்கிலம்தான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று தென்னிந்தியர்கள் குறிப்பாகத் தமிழர்கள் விரும்புகிறார்கள். ஆகையால் ஒருவருடைய இஷ்டத்துக்கு விரோதமாக இந்தியைத் திணிப்பது நன்மையைப் பயக்காது. மற்றவர்களைத் துன்புறுத்தி ஒருவர் சுகமாக நீண்ட நாள் வாழ முடியாது. போலீஸ் பலத்தையும் படை பலத்தையும் காட்டி ஆட்சி புரிய முடியாது. இது ஆங்கிலேயர்களே கண்ட உண்மை.

இந்தியே ஆட்சி மொழியாக வேண்டும் என்ற பிடிவாதத்துடன் அமுல்படுத்தினால் இல்லி சர்க்கார் தமிழ் நாட்டை இழக்க நேர்ந்ததற்கு முக்கிய காரணம் இந்தித் திணிப்பு என்று பிற்கால சரித்திரம் கூறும்.

சேலம்

27—1—65 பி. எம். நடராஜன்

## சிறிமா - சாஸ்திரி ஒப்பந்தம்

சிறிமா — சாஸ்திரி ஒப்பந்தம் இங்குள்ள தமிழருக்குப் பேரிடியாக வந்துள்ளது. ஏனென்றால், 1. தமிழ் நாட்டுக்குப் பாரமாக இவ்வைந்து இலட்சம் தமிழர்களும் வருவார்கள். இவர்களைக் குடியேற்றுவது ஒரு பெரிய பிரச்னை: 2. இலங்கையில் உள்ள தமிழர்களின் போராட்டம் இதனால் நிச்சயம் பாதிக்கப்படும். அவர்கள் மேலும் சிறுபான்மையினராக்கப்படுவர். தமிழினமே இலங்கையில் சிங்கள ஆதிக்கத்தால் அற்றுப் போனாலும் ஆச்சரியப்பட இடமில்லை. இப்பொழுதே தமிழ்ப் பகுதிகளான திரிகோணமலை, கந்தளாய், அம்பாறை முதலிய இடங்கள் சிங்கள மயமாகின்றன, திட்டமிடப்பட்ட குடியேற்றத்தினால். வேறு பல நாடுகளில் உள்ள தமிழர்களையும் இந்தியாவுக்கு அனுப்ப நல்ல சாக்குக் கிடைத்து விடும்.

இவ்வளவு விளைவுகளையும் கொண்டு வரச் செய்த இவ்வொப்பந்தத்தைச் செய்துவிட்டு—நேருஜியே கனவிலும் எண்ணாத காரியத்தைச் செய்து விட்டு — பிரச்னையைத் தீர்த்து விட்டதாகப் பெருமை பீற்றிக் கொள்கிறார் திரு சாஸ்திரி. இதைக் காங்கிரஸ்காரர்களும், முக்கியமாகத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர்களும் வாய் திறவாமல் ஆதரிக்கிறார்களே!

யாழ்ப்பாணம்

22—12—64 வெ. இரகுநாதன்



# வீட்டுச் சமையலுக்குச் சுவை கூட்டுவது

# அமுல் வெண்ணெய்






அமுல் வெண்ணெயினால் எத்தனை எத்தனை உணவு வகைகள் ஆக்கமுடியும் என்பதைக் கண்டு நீங்கள் வியந்து மகிழ்வீர்கள். கேக்கு, பிஸ்கட்டுகள்... ஹாண்ட்வோ காரி தோக்ளா... ஆகிய எல்லாவற்றையும் அமுல் வெண்ணெயினால் தயாரித்து இன்பமாய் சுவையுங்கள். மறவாதீர்கள்: அமுல் வெண்ணெயினால் சமைத்த எந்தப் பண்டமும் கூடுதலான போஷாக்கை உடமக்கு அளிக்கிறது. கடைந்தெடுத்த பண்ணைப் புதுமையோடு ஐந்தே மணி நேரத்தில் பால் பாண்டத்திலிருந்து வெண்ணெய்ப் பொட்டணத்திற்கு மாறும் தூய, புத்தம்புதிய பாலேடு செறிந்த அமுல் வெண்ணெய். தெம்புதரும் சூரிய ஒளி வைட்டமின்களான ஏ, டி இரண்டும் வளப்பமாக அடங்கியது — ஆகவே வளரும் குழந்தைகளுக்கு இன்றியமையாதது.

பண்ணைப் புதுமை மாறாத சுத்தமான பால்ஆடை...

# அமுல் வெண்ணெய்

அமுல் உங்கள் உணவுக்கு மதிப்பிட முடியாத உயரியான போஷாக்கின் பலனை அளிக்கிறது.

கெய்ரா கோ-ஆபரேட்டிவ் தயாரிப்பு—விலைமதிப்பற்றது

(கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்ரேட்டிவ் மில்க் ப்ரட்யூஸர்ஸ் யூனியன் லிட்.,)



CAL/AMP.35 TAM

# புயலுக்குப் பின்...

## ராஜகோபால சாஸ்திரி

இராமேசுவரம் தீவில் கடும் புயலால் விளைந்த விபரீதங்கள் பற்றிப் பலதரப்பட்ட செய்திகள், பயங்கரக் கதைகள் கேட்டு விட்டோம். இன்று பாரத நாட்டு மக்களின், ஏன், உலகத்திலுள்ள எல்லா மக்களின் அனுதாபமும் இராமேசுவரம் தீவில் வாழும் மக்களிடம் திரும்பியிருக்கின்றன.

மீன் பிடித்தல், யாத்திரைத் தொழில், சிறு தோட்டத் தொழில் ஆகியவை இந்தத் தீவில் வாழும் மக்களின் முக்கியமான மூன்று தொழில்கள். மீன்பிடி தொழிலில் நம் நாட்டிலேயே முதல் ஸ்தானம் வகித்து வந்தது இராமேசுவரம் தீவு. ஆனால் இயற்கையின் சீற்றத்தால் மீனவர்கள் படகு, வலை போன்ற தொழில் சாதனங்களையும், சகல உடைமைகளையும் இழந்து செய்வதறியாது திகைத்து நிற்கும் நிலை ஏற்பட்டுள்ளதால் மீன் பிடி தொழில் வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளது.

போக்குவரத்து வசதி துண்டிக்கப்பட்டு விட்டதாலும், புயலால் ஏற்பட்டுள்ள பீதியாலும், தற்போது யாத்திரிகர்கள் வருவது வெகுவாகக் குறைந்துவிட்டது. இதனால் யாத்திரைத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஆயிரக்கணக்கான குடும்பங்கள் வாழ வழியில்லாமல் போய் விட்டது. இதன் காரணமாக இராமேசுவரம் தேவஸ்தானத்தின் வருமானமும் பாதிக்கப் பட்டுள்ளது. புளி, முருங்கை, வெற்றிலைக் கொடிக்கால் போன்றவை அடியோடு நாசமாகி விட்டபடியாலும் ஆடு மாடுகளும் ஆயிரக் கணக்கில் இறந்துவிட்டதாலும் இவைகளை நம்பி வாழ்ந்து வந்த மக்களும் வாழ்விழந்து நிற்கிறார்கள். இவை தவிரப் பனை ஓலை, சங்கு, சோழி சேகரித்தல் போன்ற குடிசைத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களும் சிறு வியாபாரிகளும்கூட வெகுவாகப் பாதிக்கப் பட்டுள்ளனர்.

பாதிக்கப்பட்டுள்ள இம்மக்களுக்கு நிவாரணம் எந்த அளவுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று சற்று ஆராய்ந்தோமானால், அது அதிர்ச்சியைத்தான் தரும். குற்றங் குறைகளைப் பற்றிச் சொல்வதற்கு முன், பாராட்டப்பட வேண்டியவைகளைப் பற்றியும் குறிப்பிட விரும்புகிறேன்.

முதலாவதாக நமது பாராட்டுக்குரியவர்கள் மின்சார இலாகாவினர். மண்டபம் பாம்பன் இடையே கடலிலுள்ள மின்சார ஸ்தம்பங்கள் யாவும் விழுந்து தொடர்பு அற்றுப் போய்விட்ட போதிலும் நகரத்திலுள்ள கம்பித் தொடர்புகளை ஒழுங்குபடுத்திக் கைவசமிருந்த மின்சார ஜெனரேட்டரை இயக்கி மூன்றாவது நாளே நகரின் இருளைப் போக்கினர். இங்கு வந்த மின்சார இலாகா பிரதம என்ஜினியர் திரு அப்பாதுரை அவர்கள் இன்னும் ஓரிரு மாதங்களில் மின்சாரப் பாதை ஒழுங்குபடுத்தப்பட்டுச் சகஜநிலை ஏற்பட்டுவிடும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

அடுத்தபடியாக, பாம்பன் கால்வாயில் நின்று கொண்டிருக்கும் கல் தூண்களின் உதவியைக் கொண்டு தாற்காலிகமாகக் கம்பி இழுத்து, தந்தி, டெலிபோன் தொடர்பை ஏற்படுத்தியதோடு தபால் போக்குவரத்து ஒழுங்காக நடைபெறுவதற்கும் ஏற்பாடு செய்த தபால் தந்தி இலாகா அதிகாரிகளும் ஊழியர்களும் நம்மால் பாராட்டப்பட வேண்டியவர்கள்.

புயலடித்த மூன்றாவது நாளிலிருந்து, மந்திரிகள் திரு கக்கன், திரு ராமையா, திரு பூவராகன் முதலியோரும் மற்றும் பல அதிகாரிகளும் வந்து போன வண்ணம் இருந்தனர். முதல் மந்திரி திரு பக்தவத்சலம் அவர்கள் ஹெலிகாப்டரில் இறங்கித் தங்கி யிருந்த இருபது நிமிட நேரத்தில் பதினைந்து நிமிடங்கள் பரிவட்ட மரியாதைகளுடன் ஆலய தரிசனம் செய்து விட்டு, பாக்கியிருந்த ஐந்து நிமிடத்தில் பாதிக்கப்பட்ட பகுதிகளைப் பார்வையிட்டு விட்டுப் பறந்துவிட்டார். மத்திய மந்திரி டி. டி. கே.



வும் ஆகாயத்திலிருந்தே பார்வையிட்டாராம்.

ஆனாலும் நிவாரண வேலைகள் நடப்பதில் அசாதாரணமான காலதாமதம் ஏற்பட்டது. சகலத்தையும் இழந்து துடிக்கும் மக்களின் பசியைப் போக்கவேண்டிய, உடனடியாக ஆரம்பிக்கப் பட வேண்டிய அரசாங்கக் கஞ்சித் தொட்டி ஆறு நாட்களுக்குப் பிறகுதான் திறக்கப்பட்டது. காரியங்கள் எவ்வளவு மந்தமாய் நடைபெற்றிருக்கின்றன! ஸ்தலத்திலுள்ள நியாய விலைக் கடைகளில் அரிசி, இருப்பு இருந்ததாலும், இராமேசுவரம் தேவஸ்



சாளம், காஞ்சி காமகோடி மடம், மற்றும் வசதியும், நல்ல உள்ளமும் கொண்ட தனிப்பட்ட தனவான்கள் சிலரும் தாங்களாக வந்து உணவு விநியோகம் செய்ததனுல்தான் ஆறு தினங்கள் கழித்து ஆரம்பிக்கப்பட்ட அரசாங்கக் கஞ்சித் தொட்டியைப் பயன்படுத்திக் கொள்ள உயிருடன் மக்கள் மிஞ்சினர் என்று சொன்னுல் மிகையாகாது.

விமானத்திலிருந்து போடப்பட்ட உணவுப் பொட்டலங்களில் எத்தனை ஏழைகளின் வயிற்றுக்குப் போயின என்று கணக்கிட்டால் அது அதிர்ச்சியையே தரும். 24ம் தேதியிலிருந்தே தனுஷ்கோடியிலிருந்து மக்கள் நடந்து வெளியேற ஆரம்பித்து விட்டார்கள். பாம்பன் கால்வாயில் படகுப் போக்குவரத்தும் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இந்நிலையில் உணவுப் பொட்டலங்களைப் படகுகள் மூலம் கொண்டு வந்து மக்களுக்கு விநியோகித்திருக்க வேண்டும். 27ந் தேதி வரை விமானத்திலிருந்து உணவுப் பொட்டலங்கள் போடப்பட்டுக் கடலிலும், மணல் மேட்டிலும் குப்பை மேடுகளிலும் விழுந்து வீணுக்கப்பட்ட விந்தையான காரியம் நம் நாட்டைத் தவிர வேறு எங்குமே நடந்திராது. நடக்கவும் முடியாது.

தெருக்களிலே விழுந்த உணவுப் பொட்டலங்களை நிவாரண வேலைகளில் ஈடுபட்டிருக்கும் எதிர்க் கட்சியைச் சேர்ந்த தொண்டர்கள் தொடக்கூடாது என்று காங்கிரஸ்காரர்கள் தடுத்த விந்தையும் கூட இங்குதான் நடைபெற்றது.

பாதிக்கப்பட்ட மக்களுக்காக நன்கொடையாக நமது நாட்டின் பல பாகங்களிலுமிருந்து வந்த பொருள்கள் ஏராளம். பழங்கள், பிஸ்கட்டுகள், ரொட்டிகள், உடைகள் முதலியவை வாரி வாரியாக வந்து இறங்கின. இவைகளில் ஒரு பகுதி, மிகச் சிறிய பகுதி மண்டபம் அகதிகள் முகாமில் விநியோகிக்கப்பட்டதாம். ஆனுல் இப்பொருளில் ஓர் அணு அளவுகூட இராமேசுவரம்வரை எட்டிப் பார்க்கவேயில்லை. நன்





கொடையாக வந்த பொருள்கள் தேவைப் பட்ட மக்களுக்குக் கிடைக்காமற் போனது எத்தனைய் துர்ப்பாக்கியம்!

கல்கத்தா மார்வாரி புயல் நிவாரண சங்கத்தினர், குன்றக்குடி அடிகளார், கிறிஸ்தவப் பாதிரிமார்கள், மற்றும் சிலர் தனிப் பட்ட முறையில் அவர்களாகவே அளித்த பொருள்கள்தான் மக்களுக்குக் கிடைத்தன. இதனால்தான் இங்குள்ள மக்கள் நன்கொடை வழங்குவோரிடம் நேரிடையாக விநியோகம் செய்யும்படியும், அரசாங்கத்தின் மூலம் கொடுக்க வேண்டாமென்றும் சொல்ல முற்பட்டிருக்கிறார்கள்.

குடியிருந்த குடிசைகளை இழந்து நடுத் தெருவில் நிற்கும் மக்களுக்கு உடனடியாகக் கொடுக்க வேண்டிய முப்பது ரூபாயையும் பதினைந்து நாட்களுக்குப் பிறகுதான் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். சிவப்பு நாடாவின் மகிமையே மகிமை!

தொழிலிழந்து, வருமானத்துக்கு வழி யில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டும், பொது இடங்களில் பலர் மத்தியில் இருந்து உண்ணவும் முடியாமல் மானத்துக்குப் பயந்து பல நாட்களாகப் பட்டினி கிடக்கும் குடும்பங்களும் எத்தனையோ!

தினந்தோறும் பத்திரிகைகளைப் பிரித்தால், தனுஷ்கோடி புயல்நிவாரணத்துக்கு ஏராளமான நன்கொடைகள் வழங்கப்படுகின்றன என்று தெரிகிறது: நன்கொடையாளர்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. ஜனாதிபதியிடமும், பிரதம மந்திரியிடமும், ராஜ்ய முதல்மந்திரியிடமும், ஜில்லா கலெக்டரிடமும் கொடுக்கப்படும் இந் நன்கொடைகள் புயலால் பாதிக்கப்பட்ட மக்களிடமே ஒழுங்காக விநியோகம் செய்யப்படுவதற்கான தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்:

அரசாங்க அதிகாரிகள், ஸ்தலத்தைச் சேர்ந்த தொகுதி சட்ட சபை, பாராளுமன்ற அங்கத்தினர்கள், இங்குள்ள எல்லா அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகள் ஆகியோர் கொண்ட ஒரு நிவாரணக் குழு அமைக்கப்பட வேண்டும். அக்குழு புயலால் ஏற்பட்டுள்ள சேதங்கள், செய்யப்பட வேண்டிய நிவாரணங்கள் இவைகளைப் பற்றிக் குடும்ப வாரியாக ஒரு பட்டியல் தயாரிக்க வேண்டும். அப்பட்டியலைப் பரிசீலனை செய்து அந்த அடிப்படையில் கிடைக்கும் பொருள்களை நியாயமான முறையில் விநியோகம் செய்ய வேண்டும். அப்பொழுது தான் பாரபட்சமற்ற ஒழுங்கான விநியோகம் நடைபெறும். மக்கள் மனத்திலுள்ள புயல் நிவாரண நிதியைப் பற்றிய சந்தேகமும் நீங்கும்...

எங்கள் ஊரைச் சேர்ந்த ஒரு பெரியவர் கூறினார்: ''இருபதினாயிரம் மக்களைக் கொண்ட இந்தத் தீவில் சுமார் ஆறாயிரம் குடும்பங்கள் வாழ்கின்றன. இவற்றில் வசதியுள்ள குடும்பங்கள் என்று ஆயிரத்தைக் கழித்து விட்டாலும், ஐயாயிரம் குடும்பங்களுக்கு நிச்சயம் நிவாரணம் தேவைப்படும்; ஒரு குடும்பத்துக்கு ஆயிரம் ரூபாய் என்ற விகிதத்தில் மான்யமாக வழங்கினாலும் மொத்தம் தேவைப்படுவது ஐம்பது லட்சம் ரூபாய்தான். இத்தொகையை நன்கொடையாகவே வசூலித்து விடலாம். அரசாங்கம் பைசாக் கூடச் செலவழிக்க வேண்டியதில்லை. நியாயமான முறையில் விநியோகம் நடைபெறுகிறது என்ற நம்பிக்கை ஏற்பட்டால், இராமேசுவரம் என்ற பெயருக்கே ஆயிரமாயிரமாக அள்ளியிடக் கூடிய பல தர்ம சிந்தையுள்ளவர்கள் நம் நாட்டில் இருக்கிறார்கள். அவர்களுடைய உதவியைப் பயன்படுத்திக் கொண்டு மற்ற நிவாரண வேலைகளுக்கு அரசாங்கப் பணத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.''

இந்த முறையிலேதான் நன்கொடையாகக் கிடைக்கும் நிதியை விநியோகிக்க வேண்டும் என்று நான் சொல்ல வரவில்லை. புயலால் ஏற்பட்ட சேதத்தின் அளவுக்கு ஏற்றபடி நிவாரணத்தின் அளவும் வித்தியாசப்படலாம். செலவழிக்கப்படும் பணம் வீணாகாமல், உண்மையிலேயே புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அது கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்பதே என் நோக்கம்.

# காால்கேட் டூத் பிரஷ்

மேலும் துப்புரவாக உங்கள்
பற்களை சுத்தம் செய்யும்படி
அமைக்கப்பட்டிருக்கிறது!

ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்




புதியது
மிகவும்
கவர்ச்சியானது!!
கால்கேட்
சூப்பர் டீலக்ஸ்
டூத் பிரஷ்

வாய் துர்நாற்றத்தை அகற்ற கால்கேட் காட்டும் வழி

# க்ருஷன் ஸால்ட்ஸ்

அருந்துங்கள்

## ரத்தத்திலுள்ள அசுத்தங்களை

அகற்ற உதவுகிறது அது.

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல் முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கொலஸ் Ⓝ தயாரிப்பு

BI-KS-6 TAM



# ஜாம்–பெக்
## புண்ணான கால்களுக்கு இதமளித்து குணமூட்டுகிறது

கால்புண், கட்டிச் சிரங்கு, கொப்பளங்கள், தீப்புண் மற்றும் விஷ வெட்டுக் காயங்கள் இவை யாவும் உலகப் புகழ் பெற்ற ஜாம்-பெக் உபயோகித்த சில தினங்களில் குணமடைகின்றன. அது சருமத் துவாரங்களினூடே புகுந்து. கால் தசைகளுக்கு இதமூட்டி, புண்ணாவதைத் தடுக்கிறது. சகல குணங்களும் பொருந்திய ஜாம்-பெக்—மிருகக் கொழுப்பு மற்றும் எண்ணெய்கள் சேர்க்கப்படாதது என்பதற்கு உத்திரவாதம்.

**Zam-Buk**

**ஜாம்-பெக் மூலிகைக் களிம்பு**



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-62-TAM

ஸி.இ. புல்போர்ட் (இந்) பிரைவேட் லிமிடெட், பம்பாய்

சென்னை ராஜ்யத்திற்குப் பூரண விக்யோகஸ்தர்கள்

**மெஸர்ஸ் மோதி & கம்பெனி**

த. பெ. 1902

சென்னை -1

---

## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம், மிருதுவாகவும் மழமழப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது: உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தானன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம்(Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி**

90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே இலக்கணமாகப் படிக்க பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.

விலை தபால் செலவோடு ரூ. 6.25

**ஐசுவரியம் (குடிசைத் தொழில்)**

சோப், இங்கி, பத்தி, ஸ்நோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**

தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-50. வி. பி. 0-85.

**குடும்ப இல்லற வைத்தியம்**

பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**

விலை ரூ. 2-00. வி. பி. 0-85.

விக்கிரமாதித்தன் கதை விலை ரூ. 5.00
நளன்தமயந்தி சரித்திரம் விலை ரூ. 3.00
தபால் செலவு தனி

**வாணி புக் டிபோ (K)**

3, மலையபெருமாள் தெரு, சென்னை-1

# பிரார்த்தனை

## வை. சுப்பிரமணியன்

அந்தத் தந்தியைக் கண்ட பிறகு, ரமணன், தான் முன்பே முடிவு செய்து வைத்திருந்தபடி புறப்பட்டு விட்டான். வழி நெடுகப் பிரயாணத்தின்போது கணக்கில்லாத தடவைகள் அந்தத் தந்திக் காகிதம், சிறிது உலர்ந்த சிவப்பு நிறத்துடன், கார்பன் பேப்பர் அடியில் பதிந்த கிறுக்கல் எழுத்துக்களுடன் அவன் கண்முன் தோன்றி மறைந்து விட்டது. வாசகத்தையோ மனம் ஆத்திச்சூடி ஒப்பிக்கும் குழந்தை மாணவனைப் போல் உருப் போட்டுக் கொண்டிருந்தது. 'இன்று திருவனந்தபுரம் பாசஞ்சரில் வருகிறேன். அவரும் வருகிறார். இன்று முடிவு செய்தாக வேண்டும்.' அவனுக்கு இரண்டோ மூன்றோ விட்ட மாமா உறவுக்காரர் அந்தத் தந்தியை அனுப்பியிருந்தார். இதற்கு முந்தின பல கடிதங்களையும் அவரது தந்தி



யையும் அவள் எதிர்கொண்டு சமாளித்து விட்டாள். 'நேரில் வருகிறேன்' என்ற தாக்குதல் அவனை விரட்டியே விட்டது.

'வரட்டும்; வந்து ஏமாந்து போகட்டும். எத்தனை தடவைகள் எடுத்துச் சொல்லியும் என் மன நிலையைப் புரிந்து கொள்ளாமல் இவர் என் மறு கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்கிறார். அவரும் வருகிறாராமே! அவர் அக்கறைக்கு அவர் வருகிறார். இந்த மாமா உறவுக்காரர் மட்டும் என்ன, அவருடைய முயற்சியில் அக்கறை கொண்டு என்னிடம் உறவு கொண்டாடத் தொடங்கியிருக்கிறார். இரண்டு பேருமே வந்து ஏமாந்து போகட்டும், எனக்கு அக்கறையில்லை....' என்று ரமணன் உக்கிரமாகப் பொங்கி வந்த உணர்ச்சிகளை இப்படிச் சிந்தனை வழியில் சூடாற்றிக் கொண்டிருந்தான்.

நடு நடுவே அவன் குழந்தையும் அந்தச் சிந்தனைகளை மாற்றுவதில் பங்குகொண்டான். பிரயாண வழியில், 'இதோ பாரப்பா, எவ்வளாம் பெரிய தண்ணி!' என்று ரயில் அடியில் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்த ஆறுகளைச் சுட்டிக் காட்டுவான். 'அதோ பாரப்பா, அங்க மாடு!' என்று தொலைவில் வயல்களின் இடை கட்டியிருக்கும் ஐநூறு அறுநூறு என்ற கணக்கில் குழுமிக் கிடந்த மாடுகளைப் பார்த்துக் களிப்பான். ஐந்துக்குமேல் நூறுகளும் ஆயிரங்களும் அவனைப் பொறுத்தவரையில் ஐந்துதான்!

**ர**யில் பிரயாணம் முடிந்து பஸ் பிரயாணம் தொடர்ந்தது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் ரமணனின் தகப்பனார் இருந்தபோது அடிக்கடி இந்தப் பஸ் பிரயாணத்தைப் பற்றிச் சொல்வார். அவன் குறி வைத்துச் சென்று கொண்டிருந்த ஊரைப் பற்றிச் சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார். பத்து நாளைக்கொரு முறை அந்த ஊரின் பெயரையும் அதன் சூழல்களையும் பற்றிப் பேச்சு எடுத்து விடுவார் அவர். 'சிதம்பரம் ஸ்டேஷனில் இறங்கி, முதல் பஸ்ஸைப் பிடித்தால்......' என்று பசுமை நினைவுகளோடு, அந்த ஊரின் உயிர் முழுவதையும் தம் கண் ஒளியில் தேக்கிக் காண்பித்து உற்சாகத்துடன் பேசுவார் அவர். அவர் முப்பது ஆண்டுகள் வாழ்ந்த ஊர் அது. உத்தியோகம் பார்த்து, ரிடையர் ஆகி, பிறகு அமைதியாய்க் கோயிலும் குளமும் என்று அவர் கனிந்து உருகிக் காலம் தள்ளிய இடம். ரமணன் அந்த ஊரில்தான் பிறந்தான்; ஐந்து வயதுவரை அங்கே வளர்ந்தான். அதன் பிறகு அவனுடைய அத்தை அவனை வளர்க்கும் ஆசை கொண்டு அழைத்துச் சென்று விட்டாள். பிறகு அவன் தலையெடுத்ததும் அப்பாவும் அம்மாவும் அவன் இருந்த இடம் தேடி வந்து அவனுடன் ஒன்றும்படி ஆகிவிட்டது. நடுவே ஒரு முறைகூட ரமணன் அந்த ஊருக்குத் திரும்பியதில்லை. பிள்ளையைப் பார்க்கப் பெற்றோர் வண்டியும் கட்டுச் சாதமும் கட்டிக் கொண்டு போயாக வேண்டுமே யொழிய, அத்தை அவனைப் பிரிந்திருக்க விரும்பியதே யில்லை;

“**நா**ம்ப எங்கேப்பா போறோம்? டண்டாபாணு மாமாகிட்டேயா?” என்று கேட்டான் குழந்தை. தண்டபாணி மாமா என்று இப்போது அவனால் உச்சரிக்க முடியும் என்றாலும், அவன் மழலையில் பிறந்த அந்தப் பெயரையே பெரியவர்களும் சொல்ல ஆரம்பித்துப் பழகி விட்டார்கள். மயிலாப்பூருக்கும் திருவொற்றியூருக்கும் இடையே பஸ் பிரயாணம் பண்ணித் தண்டபாணியின் வீட்டுக்குப் போயிருந்த பழக்கத்தில் இப்படிக் கேட்டான் குழந்தை. தண்டபாணி குழந்தையின் மாமா.

“டண்டாபாணு மாமாகிட்டே இல்லேடா, ஜம்பு! உங்க தாத்தா இருந்த ஊருக்குப் போகிறோம்.”

“அந்த ஊரிலே தாத்தா இருக்காரா?”

“தாத்தா எந்த ஊரிலேயும் இல்லே: அவர் சுவாமிகிட்டே இருக்கார்.”

“பாட்டி?”

“பாட்டியும் சுவாமிகிட்டேதான்.”

“அப்படின்னு நாம்பளும் சுவாமிகிட்டே போறதுதானே அவாளைப் பார்க்கலாம். ஊரிலே போய் என்ன பண்ணறது?”

ரமணன் இலேசாகச் சிரித்தான்: அவனுடைய இரண்டு விட்ட மாமா அவனுக்கு மறுமணத்துக்குத் தூக்கு கட்டிக் கொண்டு பறக்கிறதைப் பார்த்தால் குழந்தை கேட்ட படிகூடச் செய்து விடலாம்போல் தோன்றியது அவனுக்கு.

“அப்படி இல்லேடா, ஜம்பு: உன் தாத்தா இருந்த போது நூறு தடவைக்கு மேலே இந்த ஊரைப் போய்ப் பார்த்து வரச் சொன்னார். இப்பவாவது போகலாமென்று நினைச்சுப் புறப்பட்டேன். போகிறோம்.”

“அந்த ஊரைப் பார்த்தப்புறம்?”

ஜம்புவின் கேள்விக்கு என்ன சொல்வது என்று யோசித்த ரமணன் வாத்ஸல்யம் சுடர் விடும் கண்களுடன் ஜம்புவையே பார்க்கலானான். கருந் திராட்சை போன்ற கண்களைச் சுழற்றிக் கொண்டு குழந்தையின் முகமே ஓர் ஆர்வ வடிவமாய்ப் பரபரத்துக் கொண்டிருந்தது. ரயில்—பஸ் பிரயாணத்தினால் சிறிதும் சோர்வு தட்டாமல், அப்போதுதான் சோப்பைக் குழைத்து முகம் கழுவிவிட்ட மாதிரி ஒளிர்ந்து கொண்டிருந்தது குழந்தையின் முகம். சுறுசுறுப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு, 'என்ன, எங்கே?' என்ற கேள்வி வடிவில் முகம் அசைந்து கொண்டிருக்க, பிரயாணத்தை வெகுவாக ரசித்தான் குழந்தை.

**ப**ஸ் ஊரின் எல்லையை நெருங்கிவிட்ட உற்சாகத்தை எதிரொலிக்கும் முறையில் டிரைவர் விடாமல் ஹார்ன் அடிக்கலானார். “பஸ்ஸிலிருந்து மெயில் பையை இறக்கிப் போடுவான் கண்டக்டர். ரன்னர் சுறுசுறுப்போடு அதைத் தூக்கிக் கொண்டு உள்ளே ஓடுவான். அப்புறம் பஸ் கடைத் தெருவைக் கடந்து பெரிய பண்ணை வீட்டு வாசலில் நிற்கும்; அடுத்த ஸ்டாப்பில் சந்நிதித் தெரு. இந்தப்புறம் அநுமாரையும் அந்தப்புறம் பெருமாளையும் தரிசனம்

பண்ணலாம். குளத்து மூலையில் பஸ் நின்றது. பஸ்ஸை விட்டு இறங்கி வலதுபுறம் திரும்பினால் சிவன் கோயில் கோபுரம் 'வா'வென்று கூப்பிடுவதுபோல் கம்பீரமாய் உயர்ந்து நிற்கும். மடவிளாகத் தெருவில் முதன் முதலாக நீண்ட ஆளோடியுடன் காணப்படும் வீடு தான் குருக்களின் வீடு. குருக்களைப் பார்த்து, 'நான் சீதாராமனின் பிள்ளை என்று நீ சொன்னால் போதும்; அவர் அந்த ஈசனுக்குப் பண்ணுகிற உபசாரங்களில் ஒன்றுகூடக் குறைவில்லாமல் உனக்கும் பண்ணுவார். ஒரு மாத மானாலும் நீ அங்கே தங்கியிருக்கலாம்!'' என்று அவன் தந்தை எப்பொழுதோ கூறியிருந்தது அவன் காதுகளில் ஒலித்தது.

ஜம்புவைக் கையில் பிடித்துக் கொண்டு நடந்தான் ரமணன். எதிரே குருக்கள் தோளில் போட்ட சாவிக் கொத்துடன் வந்து கொண்டிருந்தார்.

''கொஞ்ச காலத்துக்குமுன் இந்தத் தெருவிலிருந்த சீதாராமனின் பிள்ளை நான். என் பேர் ரமணன்.....'' என்று அறிமுகப் படுத்திக் கொண்டான் அவன்.

''ஓஹோ ஹோ! சீதாராமன் பிள்ளையா? இவன் உன் பிள்ளையா? தெரியறதே, சீதாராமனை உரிச்சு முகத்திலே ஒட்டியிருக்கு. இந்த ஊர் இப்பதான் உனக்குப் பிடிச்சு தாக்கும்! வாப்பா, வா, உள்ளே!'' என்று மகிழ்ச்சியுடன் அவர்களை உள்ளே அழைத்துப் போனார் குருக்கள்.

காப்பி டிபன் சாப்பிட்டபோது அப்பா கூறியிருக்கிற அந்த உபசாரம் நினைவில் வந்தது ரமணனுக்கு. எதிரே உட்கார்ந்து குருக்கள் மகிழ்ச்சியோடு ரமணனையும் ஜம்புவையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

''உன் பிள்ளை இப்போ இருக்கிற மாதிரி நீ இந்த ஊரை விட்டுப் போனவண்டா, ரமணா! உன்னை ஒரு தோளிலும், சாவிக் கொத்தை இன்னொரு தோளிலும் போட்டுக் கொண்டு கோயிலுக்குப் போவேன் நான். உனக்கு அதெல்லாம் எங்கே தெரியப் போகிறது? நீ அத்தையின் புடவைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டு போய் விட்டே!'' என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

''அந்தக் குறையெல்லாம் தீரத்தான் மாமா இந்த ஊரில் ஒரு மாசம் இருப்பதென்று லீவு போட்டுவிட்டு வந்திருக்கிறேன்'' என்றான் ரமணன். ''எங்க அப்பாவுக்கு நான் இந்த ஊரைப் பார்க்க வேண்டும் என்று கொள்ளை ஆசை!'' என்றான் தொடர்ந்து.

''வந்ததுதான் வந்தே. உன் மனைவியைக் கூப்பிட்டுக் கொண்டு வரக்கூடாதா? அவளுக்கு யார் துணை? 'அம்மா வீடு போ' என்று சொல்லி அனுப்பி விட்டாயாக்கும்!''

ரமணனின் கண்கள் கசிந்தன. அவனுடைய மௌனமே குருக்களின் மனத்தில் 'சுருக்'கென்றது.

''அந்த மாதிரி எந்தப் பாக்கியமும் எனக்கு இனிமேல் இல்லே, மாமா! இந்தக் குழந்தை பாவம் பண்ணி என்னிடம் வந்து பிறந்திருக்கிறான்.... அதெல்லாம் நடந்து ஒரு வருஷம் ஆகி விட்டது. இப்படி ஏதாவது மாற்றுத்தேடி எங்கேயாவது போய்க் கொஞ்ச காலம் கழிக்க வேண்டும் என்று அப்போதே எண்ணினேன். இப்போதுதான் முடிந்தது.''

''அப்படியா? அட, கஷ்டமே! எதையும் தெரிந்து கொள்ளாமல் நான் 'ராமணு'ன்னு பேசறேன். பொறுத்துக் கொள்ளப்பா!.... ம்.... குழந்தை ராஜாவாட்டம் இருக்கான். யார் திருஷ்டி பட்டதோ....?''

''என் திருஷ்டி ஒன்று போதும், மாமா! இவளைப் பெற்ற என்னைப்போல் யாராவது பாக்கியசாலி இருக்க முடியுமா என்று இறுமாப்புப் பட்டுக் கொண்டிருந்தேன். 'தாயில்லாத குழந்தையைச் சுமந்துகொண்டு தவிக்கும் தந்தைகள் லிஸ்டில் சேர்ந்து கொள்ளடா அற்பமே!' என்று தெய்வம் ஒரு போடு போட்டு விட்டது!''

குருக்கள் அந்தப் பேச்சை ஏற்றுக் கொள்வதற்கில்லை என்ற பாவனையில் குன் கொட்டிச் சிரித்தார்.

''என்னப்பா, பேசறே நீ! நீ என்ன, கிழவனாயிட்டியா? இல்லே குழந்தைதான் கல்லூரியிலே படித்து நாளைக்கே உத்தியோகம் கல்யாணம் என்று சிறகடித்துக் கொண்டிருக்கிற காளையாயிட்டானா? பச்சைக் கொழுந்து; பிடிச்சுக்கத் தும்பு கொம்புன்னு கண்ணிலேயே ஏக்கத்தைக் காட்டிண்டு

தொழில் ரகசியம்

— விசித்திரன்

மகனே, கவனி! [' சம்பளம், பஞ்சப்படி தவிர, அன்றாடம் செலவுக்கென்று அன்றாடம் தரப்படும் 'பேட்டா'வும் போதவில்லையே, 'நாஸ்தா'வுக்கு என்று கவலைப்படாதே! அந்தப் பற்றுக்குறையைச் சரி செய்துகொள்ள இதோ இருக்கிறது, 'பதினாறு பைசா டிக்கெட்'டில் வழி!

அந்த டிக்கெட்டுக்காக யாராவது உன்னிடம் பதினைந்து பைசா கொடுத்தால், உடனே நீ ஒரு பைசாவை எடுத்துக் கொடுத்து விடாதே: 'அப்புறம் தருகிறேன்' என்று சொல். அத்துடன் அவர் உன்னை விட்டால்

விழிக்கிறது: பேசாமெ ஓர் ஏற்பாட்டைப் பண்ணிக் கொள்ளாமல்.... இப்பதான் என்ன? சுகவரன் உன்னைக் கொண்டு வந்து என்கிட்டே விட்டிருக்கார். நான் பார்த்துக் கொள்கிறேன். போகும்போது இந்தக் குழந்தைக்கு அம்மாவோடு போகப் போறே, பார்!'' என்று குஷிப்படுத்தும் ஒரு சிரிப்புச் சிரித்தார் குருக்கள்.

ரமணனுக்கு நெஞ்சில் இரட்டைக் குண்டுகள் வெடித்தன போன்று வேதனையா யிருந்தது. 'மாமாவை ஏமாற்றி விட்டுத் தந்தியையும் கிழித்துப் போட்டு விட்டு இப்படி ஓர் அமைதிக்காக இங்கே வந்தால் இந்தக் குருக்கள் பூகம் வைப்பிருரே!' என்று அவன் நினைத்தான்.

அவர் கருத்துக்கு எதிராகப் பதில் சொல்வதற்கு வார்த்தைகளைத் தேடி, மனத்துள் கோவைப்படுத்திக் கொண்டு அவன் நிமிர்ந்தபோது எதிரில் ஒரு பெண் வந்து குருக்களின் பக்கத்தில் நின்றாள். அவ ளுடைய பார்வையில் அவரை உரித்து வைத் திருந்தது அவளுடைய முகத்தில்.

''இவனைக் கோயிலுக்குக் கொண்டு போய் எல்லாம் காண்பிக்கிறேன், அப்பா!'' என்றாள் அப் பெண் ஜம்புவைப் பார்த்துக்கொண்டே.

''செய்வேன்!'' என்றார் குருக்கள்: ''சாவியை எடுத்துக் கொண்டு போ ஞாபக மாக.''

''வருகிறாயாடா ராஜா? உன் பேரென்ன?'' என்று குழந்தையிடம் கேட்டாள் அவள்.

''ஜம்புன்னு எங்க அப்பா கூப்பிடுவா. ஸ்கூல்லே ஜம்புநாதன்னு பேர் கொடுக்க ணும்!'' என்றான் ஜம்பு.

''பேஷ்! பேஷ்!'' என்றார் குருக்கள். ''இன்னும் ஸ்கூலுக்கு அனுப்பலியா?''

''இப்போதான் ஐந்து முடிகிறது. அடுத்த மாதம் படிக்க வைக்கலாம் என்றிருக் கிறேன்.''

அவள் சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டதும் ஜம்பு 'விருட்'டென்று எழுந்து ''நான் கோயிலுக்குப் போயிட்டு வரட்டு மாப்பா?'' என்று கேட்டான்.

''போய்ட்டு வா. போய்ட்டு வா!'' என்று சிரித்துக் கொண்டே விடை கொடுத் தான் ரமணன்.

''குழந்தை சகஜமாகப் பழகிக் கொள் கிறான். அதனால் அவனைப் பற்றி நீ கவலைப் படவே வேண்டாம். ஆமாம், நீ ஆபீஸுக் குப் போகிறபோது இவனை யார் பார்த்துக் கொள்கிறார்கள்?'' என்று கேட்டார் குருக்கள்.

## பைசாயிஸம்!

பார்; விடாவிட்டால், 'இரண்டு பைசா வேண்டுமானால் தருகிறேன்; ஒரு பைசா தருகிறீர்களா?'' என்று கேள். 'மூன்று பைசா நாணயம் என்று ஒன்று தனியாக வந்த பிறகுமா இந்த ஒரு பைசா பஞ்சம்?' என்று அவர் மூக்கால் அழுதால், 'மூன்று பைசா என்ன, ஐந்து பைசாவாகவே தருகிறேன்; நாலு பைசா தருகிறீர் களா?' என்று கேள். அது அவரிடம் நிச்சயம் இருக் காது; இருந்தால்தான் முதலிலேயே அவர் அதைப் பத்து பைசாவோடு சேர்த்துக் கொடுத்திருப்பாரே! ஆகவே, ஆசாமி விழிப்பார்; அதுதான் சமயமென்று, 'டிக்கெட், டிக்கெட்?' என்று கேட்டுக்கொண்டே நீ அவரைத் தாண்டி அப்பால் போய் விடு. அப்படியும் அவர் இறங்கும்போது உன்னை ஒரு பார்வை பார்க்க லாம்; அதற்காக அஞ்சாதே! 'இன்னய்யா, பிசாத்து ஒரு பைசாவுக்காக உசிரை விடறே! இந்தாய்யா, நான் வேணும்னு ரெண்டு பைசாவாத் தரேன், எடுத்துக்கிட் டுப் போய்யா!'' என்று ஒரு சிறு சீறிச் தோல் பையில் கையை விடு. அதற்குமேல் ஆசாமி அங்கே நிற்கமாட் டார்; அவமானம் தாங்காமல் இறங்கிப் போய்விடுவார்.

இப்போதுதான் 'விட்டது சனியன்!' என்ற திருப்தி யுடன் நீ தோல் பையில் விட்ட கையை எடுக்க வேண் டும். ஆமாம், அதற்கு முன்னால் எடுக்கக் கூடாது. அப்படியே எடுத்தாலும் வெறுங்கையைத்தான் எடுத்துக் காட்ட வேண்டுமே தவிர, இரண்டு பைசாவுடன் கையை வெளியே எடுக்கவே கூடாது!

என்ன, தெரிந்ததா? இப்படி நாளொன்றுக்குக் குறைந்தபட்சம் இருநூறு பேரையாவது இறக்கி விட் டால், தலைக்கு ஒரு பைசாதான் அவர்களுக்கு நஷ்டம்; உனக்கோ இரண்டு ரூபாய் லாபம் — இதுதான் நம் தொழில் நுட்பம் மகனே, தொழில் நுட்பம்!

சொல்லித் தந்தவர்-
தந்தை:
முன்னாள் பஸ்
கண்டக்டர்.

கேட்டுக்
கொண்டவர்-
மகன்:
இந்நாள் பஸ்
கண்டக்டர்.



"குடியிருக்கிறவர்கள் வீட்டிலிருப்பான்."

"எத்தனை நாளைக்கு இப்படி இன்னொருத்தர் வீட்டில் அண்டியிருக்க முடியும்? பேசாமல் நான் சொல்கிற ஏற்பாட்டைப் பண்ணிக் கொள். உனக்கு யாரும் அங்கே எடுத்துச் சொல்லலையா?"

"சொல்லாமல் என்ன! ஒரு நூறு பேராவது சொல்லியிருப்பார்கள். இப்போதுகூட அந்த மாதிரி ஒரு முயற்சியை என் மாமா ஒருத்தர் தீவிரமாக முனைந்து செய்வதைப் பார்த்து விட்டுத்தான் இங்கே தலைமறைவாக ஓடி வந்துவிட்டேன்."

குருக்கள் பெரிதாகச் சிரித்தார். "அட, வைத்தியமே! ஏன் அப்படி ?"

"மாமா, நான் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன். என் குழந்தை கண்ணைக் கசக்காமல் இருக்க வேண்டும் என்பதுதான் என் வாழ்க்கையின் ஒரே லட்சியம். என் சுயநலத்தை எந்த வகையிலும் கலந்து அவனுக்கு அநீதி இழைக்க நான் தயாராயில்லை."

"அட ராமா! உனக்குச் சரியாக எடுத்துச் சொல்கிறவர்கள் யாருமே இல்லை போல் இருக்கிறது. அதனால்தான் நீ இப்படி ஓடி வந்துவிட்டே. இதிலே அநீதி என்ன கிடக்கிறது? குழந்தைக்குத் தாயார் ஸ்தானத்தில் இருந்து செய்ய வேண்டிய எல்லாத்தையும் அப்பாவாக இருந்துகொண்டு நீயே செய்து விட முடியுமா? உனக்கு ஒரு மனைவி வேண்டாத போனாலும் உன் குழந்தைக்கு ஓர் அம்மா வேணுமே!"

"உங்கள் வாதம் சரியாயிருக்கலாம், மாமா. நான் இந்த விஷயத்திலே மாறுபட்டவனாக இருந்து நிரூபிக்க வேண்டும் என்று விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறேன். முதலில் இப்படித்தான் வாதம் சரியானது போல் ஆரம்பிக்கும். வாதத்தையொட்டி மற்றவர்களுடைய கருத்து என் வாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கினால், ஒரு நாள் எனக்கும் இன்னொருத்திக்கும், நடுவில் என் குழந்தை ஒரு பிரச்னையாக மாற நேரிட்டு விடும். என் குழந்தையை நான் காட்டிக் கொடுக்க விரும்பவில்லை."

அவன் பேசிக் கொண்டிருக்கும்போது குருக்களின் முகத்தில் அவன் கருத்துக்களை அவர் உதறி விடும் விறுவிறுப்பு படர்ந்தது. அந்தச் சமயத்தில் இரண்டு பேர் குருக்களைத் தேடிக் கொண்டு வந்ததால் பேச்சு அத்துடன் நின்று போயிற்று.

நான்கு நாட்களாக ரமணன் ஊரைச் சுற்றிப் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தான். பெரும்பாலும் குழந்தையைக் கூட அழைத்துக் கொண்டுதான் போனான். இரண்டு மைல் தொலைவில் உள்ள ஏரிக்கு ஒரு நாள் அவன் சென்றிருந்தான். தன் தகப்பனார் இருந்த இடம், நடந்த இடம், என்று அவர் நினைவுகளைக் கூறும் இடங்களை யெல்லாம் ஆர்வத்துடன் பார்த்தான். ஏரியில் நீர் கரை கட்டியிருந்தது. வெள்ளியை உருக்கி நிறைய விட்டிருந்ததுபோல் அதன் நீர்ப் பரப்பு நெஞ்சை நிறைத்தது. ஜம்பு கரையோரம் வரிசையாக வந்து நின்ற நாரைகளை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இந்த இடத்திலே யெல்லாம் உன் தாத்தா நடந்திருக்காரடா, ஜம்பு!" என்றான் ரமணன்.

"இங்கே என்ன பண்ணினு தாத்தா? ஏன் நடந்தா?"

"இங்கே அவர் வேலை பார்த்தார். அதனால் அடிக்கடி இந்தக் கரை மேலே போகணும். போயிருப்பார்."

திரும்பி வரும் போது ஜம்பு ஓர் அதிசயத்தைக் கண்டவன்போல், "இது என்னப்பா ?" என்று கேட்டான். அவர்கள் கண்ட இடம், மேலாக ஒரு ஆறும் கீழாக — குறுக்கே — செல்லும் ஒரு சிற்றாறும் ஒன்றுக்கொன்று தொடாமல் சந்திக்கும் இடம்.

"இதற்கு ஸைஃபன்னு பேர். மேலும் கீழுமா ஆறு போகிறது பார்" என்று விளக்கினான் ரமணன்.

அந்த இடத்தையும் பற்றி அவன் தகப்பனார் ரமணனுக்குச் சொல்லி யிருக்கிறார். அவரது உத்தியோக எல்லையில் அந்த இடமும் இருந்திருக்கிறது. இதை யெல்லாம் தன் பிள்ளைக்குத் தான் காண்பிக்க நேர்ந்த அநுபவத்தை எண்ணியபோது அது ஓர் இன்பமாகத்தான் இருந்தது ரமணனுக்கு.

குழந்தையைக் கையுடன் பிடித்துக் கொண்டு நடந்தபோதெல்லாம் ரமணனின் மனம் அலைப்புண்டு கிடந்தது. வேறு நினைவுகளுடே அந்தப் பெண்ணின் ஞாபகமும் திடீர் திடீரெனப் பிறக்கும். குருக்கள் அவளைச் செல்லமாக, "செல்லா!" என்று கூப்பிடுவதைக் கவனித்திருக்கிறான் அவன். அந்தச் செல்லா ஜம்புவுக்கு எப்படி யெல்லாம்தான் உற்சாகமூட்டிக் கொண்டிருந்தாள்! 'ஜம்பு' என்று அடிக்கடி கூப்பிட்டுக் கொண்டு உபசாரம் செய்தபடி இருந்தாள். தினசரி அவனை ஒரு கையில் பிடித்துக் கொண்டு, மற்றொரு கையில் விளக்கேற்ற எண்ணெயும் எடுத்துக் கொண்டு கோயிலுக்குப் போவாள்.

அன்று எங்கெங்கோ சுற்றி விட்டுத் தன் போக்கில் கோயிலுக்கும் சென்றான் ரமணன். நாகரிகம் கலவாத அந்த ஊரில் மின் விளக்கின் வெளிச்சமும், இரைச்சலும் இல்லாமல் அமைதியாயிருந்தது கோவில். பொழுது சாய்ந்த பிறகு சூரியனின் பொன்னொளி வெளியே மட்டும் சூழ்ந்திருக்க, கோயிலினுள் குளுமையான ஒரு தெய்வீக இருள் இலேசாகப் படரத் தொடங்கியது. அந்த அமைதியும் நேரமுமே ஒரு புதிய மனிதரைப் புல்லரிக்கச் செய்வனவாய்த் திகழ்ந்தன. இங்கொன்றும் அங்கொன்றுமாய் அகல் விளக்குகள் சுடர் தெறிக்க ஆரம்பித்தன.

ரமணன் பிராகாரம் சுற்றும்போது தட்சிணாமூர்த்தி சந்நிதியினின்றும் செல்லா ஜம்புவைக் கைப்பிடித்தபடி திரும்பினாள்.

"என்ன மாமா அதிசயம்! இப்போதான் உங்களைப் பற்றி நினைச்சேன். நீங்க வந்து குதிக்கிறேளே!" என்று இயல்பாகப் பேசத் தொடங்கினாள் அவள்.

"நான் வந்து குதித்துத்தான் பத்து நாட்கள் ஆகின்றனவே! என்ன புதிதாக என்னைப் பற்றி நினைப்பதற்கு?" என்று கேட்டான் ரமணன்.

"ஒரு பாடகருக்கு இசையைக் கேட்பதும், அப்பியாசம் அல்லது கச்சேரி பண்ணுவதுபோல் முக்கியமானது. அது, ஒருவருடைய சங்கீத அனுபவத்தை வளப்படுத்துவதுடன் அவரது இசை அறிவையும் விசாலமாக்குகிறது. எனது பிலிப்ஸ் ரேடியோ எனக்கு முக்கியமானது. ஏனெனில், அது பல பாடகர்களின் வெவ்வேறான இசைகளையும் அநேக பண்புகளையும் எனக்கு கொணர்ந்தளிக்கிறது"

**ஜி.என். பாலசுப்ரமணியம்**

கர்நாடக சங்கீதத்தில் புதியதோர் பாணியை சிருஷ்டி செய்தவர். இவரது சிறந்த அம்சங்கள், 'ப்ருகா'வும் விஸ்தாரமாக அலசிப்பாடுவதுமே. ஜி.என்.பியும் ஓர் உணர்ச்சி மிகுந்த இசைப் புலவர்.

பிலிப்ஸை உலகெங்கும் நாடுகின்றனர். பிலிப்ஸ் ரேடியோ ஒன்றில்தான் பிரத்தியேகமான இக் குணங்களைக் காணலாம்: தலை சிறந்த 'நோவோ ஸோனிக்' அம்சங்கள் நாகரிகத்தின் சின்னமான 'டிசைன்' அமைப்பு நாடெங்கும் உங்களுக்குத் திறமையான சேவையளிக்க, பிலிப்ஸ் தொழிற்சாலைகளில் தேர்ச்சி பெற்ற பிரத்தியேக டீலர்கள்

# பிலிப்ஸ்

**நோவோஸோனிக்**

# ரேடியோ




ஈடற்ற தரம்•எண்ணற்ற வகைகள்

JWTPHR 1670 TAM

''இந்த இடத்திலே நான் இப்போ ஒரு பிரார்த்தனை பண்ணிக் கொண்டேன் மாமா. அதனாலே நீங்கள் தற்செயலாக வந்தது ஆச்சரியமாயிருக்கிறது. என் பிரார்த்தனை பலிக்கடும்னு தோணுகிறது!''

''என்ன பிரார்த்தனை அது?''

''இந்த ஜம்புவுக்கு ஒரு நல்ல அம்மாவைக் கொடு, பகவானேன்னு வேண்டிக் கொண்டேன்.''

ரமணனின் மனம் சிறிது அனுக்குற்றது: ''அப்படியா? நானும் சற்று முன்னேதான் சந்நிதியிலிருக்கிற சுவாமியை வேண்டிக் கொண்டேன். 'இப்படி ஒரு பிரச்னை கிளம்பி யிருக்கிறதே. குருக்கள் மாமா முழு மூச்சாக என் மனசைக் கலைத்து ஏதோ செய்ய முனை கிறாரே. அதற்கெல்லாம் இசைகிறதுபோல் என் மனசைப் பலவீனமாக அடிக்காதே, பகவானே' என்று வேண்டிக் கொண்டேன்.''

''பார்ப்போம்! யார் பிரார்த்தனை பலிக்கப் போகிறது என்று பார்ப்போம். வாடா, ஜம்பு!'' என்று சிரித்துக் கொண்டு கூறி விட்டுப் போய்விட்டாள் செல்லா.

வெகு நேரம் அந்தச் சிரிப்பு அவன் மனத்தில் கிணுகிணுத்துக் கொண்டிருந்தது. இலேசான இருளின் பின்னணியில் அவளது முகம் சந்நிதி அகல்விளக்குடன் போட்டியிடுவது போல் ஒளிர்ந்ததை எண்ணினான் அவன். 'உண்மையில் அவள் அந்தப் பொருளுடன் தான் பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருப்பாளா? அவள் மனம் சலனமடைவதற்கு நான் காரணமா யிருந்திருக்கிறேனா? என் மனமும் சிறிது சலனம் கொண்டிருக்கிறது என்றாலும் அது என்னோடு போவது! நான் அதை அழிப்பதை எளிதாகச் செய்துவிட முடியும். இல்லையென்றாலும் அதை நான் எப்படியோ அனுபவித்து விட்டுப் போகிறேன்..... ஆனால், அவள்.....? களங்கமில்லாமல் இந்த அமைதியான தெய்வசந்நிதியில் எத்தனையோ வருஷங்களாக, தூய்மை ஒன்றையே அறிந்து வாழ்ந்து வரும் அவள் வாழ்வு என்ன ஆகும் ?'

நேரம் போவது அறியாமல் அமர்ந்து யோசித்துக் கொண்டிருந்து விட்டு இரவு ஒன்பது மணிக்கு வீடு வந்தான் ரமணன். ஜம்பு செல்லாவின் பக்கலில் படுத்துத் தூங்கிப் போய் விட்டான்.

மறுநாள் காலை முதல் பஸ்ஸுக்கு ஊருக்குப் போய் விடுவதென்று நிர்மானித்தான் ரமணன். அன்றிரவும் குருக்கள் அவனிடம் அந்தப் பேச்சை எடுத்தார். பேச்சு எழும் போதே செல்லாவையும் பற்றிக் கொண்டு விட்டார் அவர். ''நீயே பாரேன்; இப்போது ஜம்புவுக்குச் செல்லா இல்லாமல் முடியாது. செல்லாவுக்கு ஜம்புவை விட்டு விட்டு இருக்க முடியாதுன்னு தீர்ந்து போய் இருக்கு. இதற்கப்புறமும் உனக்கு என்ன மனக் குறனி ஏற்பட முடியும்?'' என்று ஆரம்பித்தார் அவர். ரமணன் விவாதத்தை வளர்க்க விரும்பவில்லை. இன்று இரவுமட்டும் 'உம்' கொட்டிக் கொண்டிருந்துவிட்டு நாளைக் காலை புறப்பட்டு விட்டால் எல்லாம் அடிபட்டுப் போகிறது என்று நினைத்தான் அவன்:

காலையில் நான்கு மணிக்கே எழுந்துவிட்டான் ரமணன். ஊருக்குப் புறப்படப் போவதைத் திடீரென்று சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் குளிக்கப் போனான்.

'நேற்றிரவு இப்படித்தான் இருளுமல்லாது, ஒளியுமல்லாது இடைப்பட்ட நேரத்தில் அகல் விளக்குடன் போட்டியிட்ட முகத்தோடு செல்லா தோற்றம் தந்தாள். அவள் உள்ளம் என்னைப் பற்றிய சலனத்துடன் இருக்குமோ? ஆனால் என்னிடம் ஏன் அவளைப் பற்றிய இந்தச் சலனம்?... இதை அழித்துக் கொள்ள என்னால் முடியும்: இன்னும் இரண்டு மணி நேரத்தில் ஜம்புவை அழைத்துக் கொண்டு முதல் பஸ்ஸில் கிளம்பினால் அவளை விட்டு விலகி விலகித்தானே போய்க் கொண்டிருப்பேன்.' கால்கள் இறங்கும் படிகளில் பாவ, மனம் மெல்ல மெல்ல ஏறும் படிகளை எண்ணியது.

விடியற்காலம் ஊரே குளக்கரையில் கூடியிருந்தது. குருக்கள் எல்லோர் மத்தியிலும் நின்று கொண்டிருந்தார். அவர் முகம் சோர்ந்து சாய்ந்திருந்தது. 'அசட்டுப்பிள்ளை' என்று சற்றைக்கொரு முறை அவர் முனகிக் கொண்டிருந்தார்.

ரமணனின் உடலை வண்டிச் சக்கரத்தின் மீது கிடத்தி, சக்கரத்தைச் சுழற்றிக்கொண்டிருந்தார்கள். அவனுள் சென்றிருந்த நீர் 'சரசர' வென்று வழிந்து வட்டமாகச் சிதறிக் கொண்டிருந்தது. பரபரப்புடன் கூட்டத்துள் நுழைந்த டாக்டர் சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியே வந்தார். அவரது முகத்தை எதிர்ட்டுப் பார்த்தோரின் முகங்கள் தொங்க விட்டன.

கூட்டத்தில் இருந்தவர்கள் ஒருவர் கருத்தை ஆதரித்து ஒருவரும், மறுத்து ஒருவரும், வேறு யூகங்களில் சிலரும் பலபடியாகப் பேசிக் கொண்டார்கள். குருக்களிடம் பேசிக் கொண்டிருந்த டிராயிங் மாஸ்டர் ராயர் மட்டும் கூறினார்: ''அப்படி நீங்கள் நினைக்கிறபடி இவர் அசடு, கோழை என்று சொல்ல முடியாது. சுதாவாகக் குளிக்க இறங்கியிருக்கிறவர்தான். படி வழுக்கித் தண்ணீருக்குள் போயிருக்கிறார். நான் ஜல ஸ்தம்பம் செய்து கொண்டிருந்தேன். என் முதுகில் எதுவோ முட்டியது உணர்ந்து அரண்டு போய்ப் பார்த்தேன். இப்படி.... இதோ பாருங்களேன்; குளித்து விட்டுப் பூசிக் கொள்ள விபூதியும் அவர் மேல் துண்டுக்குப் பக்கத்தில் வைத்திருக்கிறார்...''

'இருக்கலாம்' என்று தோன்றியது குருக்களுக்கு. அவன் குழந்தைக்கு என்ன பதில் சொல்வது என்று தவித்தார் அவர். வீட்டில் அழுது கொண்டிருந்த செல்லாவும் நினைத்தாள். 'நான் பிரார்த்தனை செய்து கொண்டிருந்ததை அவரிடம் ஏன் அப்படி அப்பட்டமாய்ச் சொன்னேன்?'' என்று.

ஆனால் உண்மையில் ஆண்டவன் இரண்டு பேருடைய பிரார்த்தனைகளையுந்தான் நிறைவேற்றியிருக்கிறார். செல்லாதான் ஜம்புவின் அம்மாவாக இருக்க வேண்டும். இனி எப்படியும் அவன்தானே அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டும் !

# இருமலை
# அகற்றுக
# இருமல்

அகல விரைவான, கெடுதலற்ற, நிச்சயமான நிவாரணி

# க்ளைகோடின்
## டெர்ப் வஸாகா

இந்த ஆறு காரணங்களால், க்ளைகோடின்
இருமலுக்கு சிறந்த நிவாரணி:




1. எந்தவிதமான இருமலுக்கும், எப்பொழுதும் சிறந்தது
2. மருத்துவர்களால் அனுமதிக்கப்பட்ட சரியான பார்முலா
3. சிறுவரும் பெரியோரும் விரும்பும் இனிய சுவை
4. சிபார்சு செய்யப்பட்ட அளவில் உட்கொண்டால் கெடுதல் செய்யாதது
5. 4-வித சிக்கனமான சைசுகளில் கிடைக்கிறது
6. அலம்பிக்கின் நம்பகமான தரம்




**30 வருடங்களுக்கு மேலாக இருமலுக்கு வீட்டிலேயே குணமளிக்கும் நிவாரணி**

ITV 1282 TAM EVEREST


ஆண் பிள்ளை கழுத்தில் தாலியாவது?
உண்மையாக நான் பார்த்தேன். இப்படி வாருங்கள். இன்னும் சொல்கிறேன்.


கழுத்தில் ஏதாவது கட்டிக் கொண்டிருந்தாரா?
ஆமாம்! சுருக்குக் கயிறு!


நீங்கள் சில சமயங்களில் மிக நன்றாகப் பேசுகிறீர்களே. யோசனை செய்துபார்த்து அதுமாதிரி பேசுங்கள்.


அவர் கழுத்தில் துணிக் கயிறு சுற்றிக் கொண்டிருந்தாரா?


வெள்ளையாகப் பட்டையாக இருந்ததா?
ஆமாம்!



ரிட்டயர்டு டிப்டி கலெக்டர் பீமன்னு உற்சாகத்துடன் தம் இடது கையினால் பங்களா காம்பௌண்டின் கதவைத் தள்ளி விட்டு உள்ளே நுழைந்தார்; வலது கை ஏதோ ராட்சத காப்பிக் கொட்டை மிஷினைச் சுற்றுவது போல மேலும் கீழும் ஏறி இறங்கிச் சுற்றிக் கொண்டே இருந்தது; இன்று அவர் உலாவப் போனவர் வழக்கத்துக்கு விரோதமாகச் சீக்கிரமே திரும்பி விட்டார். இன்னும் நிறைய வெளிச்சம் இருந்தது.

போர்டிகோவின் ஓரத்தில் நின்றவாறு வண்ணாத்திப்பூச்சியை விரட்டி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கொட்டாப்புளிக்குத் தாத்தாவின் கைசுழற்றல் இன்னும் வேடிக்கையாக இருந்தது. பேரப் பிள்ளையாண்டானுக்கு வயது எட்டு இருக்கும்; கோதண்டபாணி என்ற முழுப் பெயரையும் சொல்லிக் கூப்பிட அவகாசம் இல்லாத டிப்டி கலெக்டர் தாத்தா செல்லமாகச் சுருக்கியது கொட்டாப்புளியாகத் திரிந்தது. குழந்தையும் ஆரம்ப நாட்களிலிருந்தே குழந்தைகள் மாவு உணவு விளம்பரப் படக் கதாநாயகன் போல் குண்டாக உருண்டையாக இருந்ததால் அந்தச் சுருக்குப் பெயர் பொருந்தியும் போயிற்று.

"என்ன தாத்தா? போன வாரம் பார்த்த டாக்கியிலே அந்த மாமி கையைக் காலை ஆட்டிப் பயமுறுத்தினது மாதிரி நீயும் கையை ஆட்டறே! டான்ஸ் சொல்லிக்கப் போறியா?" என்று கேட்டுக் கொண்டே கொட்டாப்புளி தாத்தாவை நோக்கி ஓடி வந்தான்.

"டேய்! இடியட்! ஹாப்பி நியூஸ்டா! நான் இன்னிக்கு 'லெக் பிரேக்' போட்டேன்டா! பிரமாதம் போ!" என்றார் தாத்தா கைச்சுழற்றலை நிறுத்தாமலேயே!

"லெக்கை பிரேக் பண்ணிண்டது போதாதுன்னு ஏன் கையையும் 'பிரேக்' பண்ணிக்கிற மாதிரி சுத்தறே?" என்று கேட்ட கொட்டாப்புளி ஒரு கணம் யோசித்து விட்டு விடுவிடென்று காம்பவுண்டுக் கதவு வரை ஓடினான். பிறகு கதவுக்கு வெளியே தெருப் பக்கம் எட்டிப் பார்த்து விட்டு அசுர வேகத்தில் கதவைச் சாத்திக் கொக்கியை இழுத்து மாட்டி விட்டுத் தாத்தாவிடம் ஓடி வந்தான். 'தாத்தா! யார் காலை ஒடித்தாய்? நல்ல வேளை! ஒருவரும் உன்னைத் துரத்திண்டு வரலே! கேட்டைச் சாத்திட்டேன்; அடிச்ச அடியிலே உன் வாக்கிங் ஸ்டிக் உடைஞ்சு போச்சா? எனவே, நீ போலீசுக்கு போன் பண்ணிடறது தேவலை" என்று ஒரே வேகமாகச் சொல்லி நிறுத்தினான்.

அப்போதுதான் தம்மை மறந்து கையைச் சுற்றுவதை நிறுத்தினார் பீமன்னு. "என்! என்! வாக்கிங் ஸ்டிக்! அது குளத்தங்கரைப் பக்கம்தான் கிடக்கும்! தோட்டக்காரனை விரட்டலாம்" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு தொடர்ந்து, "கொட்டாப்புளி! நான் யார் காலையும் முறிக்கலேடா! லெக் பிரேக் பந்து வீசினேன்டா! அந்தக் காலத்திலே நாற்பது வருஷங்களுக்கு முன்னாலே கிரிக்கெட் ஆட்டத்திலே நான் ஓர் ஆப் பிரேக் பௌலர்; உன்னை விடுவேன் ஒரு லெக் பிரேக் போடட்டு! ஊ"ஹூ"ம்! வராது. அப்புறம் உத்தியோகம், பதவி, அலுச்சல், ஓய்வு எல்லாம் வந்துடுத்தா? கிரிக்கெட்டை மறந்தே போய்விட்டேன்! ஆனால் இன்னிக்குப் பாரு! என்ன பிரமாதமா ஒரு லெக் பிரேக் விழுந்தது பாரு!" பீமன்னு அந்தக் காட்சியை மீண்டும் நினைவுபடுத்தி ரசித்துச் சிரித்தார்.

"உன்னே எவன் கிரிக்கெட் ஆடச் சேர்த்துக் கொண்டான்? எங்க கிளப்கூட இப்போ 'ஆக்டிவ்'வா இல்லையே?"

"நான் கிரிக்கெட் கிளப்புக்குப் போனதாகச் சொல்லலியே! வழக்கம்போலவே குளத்தங்கரைப் பக்கம் போனேன்! ஓர் அப்பத் தெரு நாய் மரத்தடியிலே இருந்து 'லொள் லொள்' என்று கருதி சேர்த்துக் குரைக்க ஆரம்பித்தது. ஒரு வேளை அல்சேஷியனாக இருந்தாலாவது 'எக்ஸ்யூஸ்' பண்ணலாம். ஆனால் அது ஒரு சாதாரண நாய். கீழே குனிந்து ஒரு கல்லை எடுத்து வீசினேன் பாரு! அப்போதான் வாக்கிங் ஸ்டிக் கீழே விழுந்தது! அந்தக் கல் அப்படியே 'ஸ்பின்' ஆகி அற்புதமான லெக் பிரேக்காக மாறிப் பாய்ந்தது பாரு! சிமிளி ஒண்டர்புல்!" பீமன்னா நிறுத்தினார்.

"அபாரம்! லெக் பிரேக் இருக்கட்டும்! அந்த நாயோட லெக் பிரேக்காச்சா? அது நொண்டி நொண்டி ஓடித்தா?"

"அதுதான்டா இல்லே, கொட்டாப்புளி! அந்த நாய் போன ஜென்மத்திலே ஒரு லெப்ட் ஹாண்டு பாட்ஸ்மென்னா இருந்திருக்கணும்! என் கல் 'டர்ன்' ஆனதை மூக்கை நீட்டிப் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தது."

"அப்போ உன் லெக் பிரேக் அதோட 'தோள் பிரேக்'காக மாறிடுத்தா?"





"சரிடா கொட்டாப்புளி! அந்த நாய்க்கு நாலைந்து மீட்டர் தூரம் தள்ளித் தாண்டா என் கல் 'டர்ன்' ஆச்சு! பாவம்! ஒரு கன்றுக்குட்டி மேலே பட்டது. ஆனால் பந்து இல்லே, கல், அற்புதமாக டர்ன் ஆகி லெக் பிரேக் ஆன சந்தோஷத்திலே நான் எல்லாத்தையும் மறந்துவிட்டேன்! வாக்கிங் ஸ்டிக் உள்பட!"

"கங்கிராசுலேஷன்ஸ்! உள்ளே வா, தாத்தா! அப்புறம் அந்த நாய் மோப்பம் பிடிச்சுண்டு இங்கே வந்து கேட் வழியாக மூக்கை நீட்டி உன்னுடைய அபாரமான குதி பார்க்கும் தன்மையை நினைத்துச் சிரிக்கப் போகிறது!" கொட்டாப்புளி பீமன்னா கையைப் பிடித்து இழுத்தான்.

"ஒரு நிமிஷம் கொட்டாப்புளி! நீ ரப்பர் பந்து வைத்திருப்பாயே! எடுத்திண்டு வா! தோட்டத்திலே கொஞ்சம் பிராக்டிஸ் பண்ணலாம்." பீமன்னாவின் வலதுகை மீண்டும் சுழல ஆரம்பித்தது.

"தாத்தா பேரு இனிமேல் பிஷன் பீமன்னாதான்! பௌலிங் பைத்தியம் பிடிச்சாச்சு! 'வெறியுள்ள நாய்கள் ஜாக்கிரதை' என்று தாத்தா கழுத்திலே போர்டு மாட்ட வேண்டியதுதான்" என்று துள்ளிக் குதித்துப் பேரப் பிள்ளை பந்து தேட உள்ளே ஓடினான்.

அடுத்த ஐந்தாவது நிமிடத்திலே தாத்தாவும் பேரனும் காம்பவுண்டுத் தோட்டத்தில் புல்வெளி படர்ந்த மூலைக்கு வந்தார்கள். அந்த மூலை அடுத்த பங்களாவின் வெளித்தடியை ஐந்தடிச் சுவரால் மறைத்துக் கொண்டிருந்தது.

"டேய்! அந்தச் சுவரிலே விக்கெட்டுக்குப் பதிலாக மூணு கோடு போட்டுட்டுப் பக்கத்திலே நில்லு. என் பந்து எப்படி 'டர்ன்' ஆகிறதுன்னு பார்த்துச் சொல்லு" என்று உத்தரவிட்டார் தாத்தா — பேரன் கீழே கிடந்த கல்லை எடுத்துச் சுவரிலே கோடு போட்டான்.

"சரி! கவனி!" என்று சொல்லிக் கொண்டே இருபது அடிக்கு அப்பால் நின்று கொண்டு பீமன்னா இரண்டு விரல்களுக்கிடையே பக்குவமாகப் பந்தைப் பிடித்துக்கொண்டு கையைச் சுழற்றினார். பந்து வேகமாகப் பறந்தது!

அடுத்த அரை நிமிட அவகாசத்தில், "அட, பாவி! யாருடா குரங்கு இப்படிப் பந்தை அடிச்சது?" என்ற ஓலம் அடுத்த வீட்டுக் வெளத்தடியிலிருந்து எழுந்து அந்த வட்டாரத்தையே அதிர வைத்தது! பீமன்னா நடுநடுங்கிப்

# முதியோர் கிரிக்கெட்

கோமதி சுவாமிநாதன்

அப்போதுதான் பெயர் வைக்கும் பிரச்சினையும் எழுந்தது.

"குளம் கிரிக்கெட் கிளப் என்று வைக்கலாம்; குளத்துக் கரை மைதானத்தில் தானே ஆடப் போகிறோம்?" என்றார் டாக்டர்.

"நோ! நோ! அது ரொம்ப டேஞ்சர்!" என்றார் கனகசபை.

"என்னையா டேஞ்சர்! அரை மணி நேரம் மழை பெய்தால் முக்கால் மணி நேரம் தண்ணீர் தேங்கும்; அப்புறம் அங்கே நெல் உணர்த்தலாம்! அந்தப் பொட்டலைப் போய் டேஞ்சர் என்கிறீரே?" என்றார் ஏகாம்பரம்.

"நான் தண்ணீருக்குப் பயப்படலே! குளம் கிரிக்கெட் கிளப் என்பதை நாம் ஆங்கிலத்தில் எழுதினால் அதை வாசிப்பவர்கள் கிளம் கிரிக்கெட் கிளப் என்று வாசித்தால் டேஞ்சரே என்றேன்! அவ்வளவுதான்" என்று கனகசபை விளக்கம் கொடுத்தார்.

"தட் இஸ் கரெக்ட்" என்றார் பீமண்ணா.

"எது? நாமெல்லாம் கிழங்கள் என்று தமுக்குப் போடுவதா?" — இது டாக்டர்.



"அழகும் அறிவும் ஒருங்கே படைத்தவளைத் தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று அலைந்தார் 'அவர்'. கடைசியில் என்னைக் கல்யாணம் செய்துகொண்டார்."

"அவர் அலைந்தது போதாதென்று நினைக்கிறேன்!"

"நோ! நோ! கனகசபையோட விளக்கம்! நாம் பேசாமல் எம். வி. வி.ன்னு வைத்து விடுவோம்; மாடர்ன் கிரிக்கெட் கிளப்! நாமெல்லாம் சேர்ந்து ஆரம்பித்தால் அது மாடர்ன் விஷயம்தானே!" பீமண்ணா வெற்றிப் புன்னகை வீசினார்.

"ஓ: கே: ரொம்பப் பொருத்தம். எம். வி. வி. தமிழிலேகூடப் பொருத்தமாக அமைகிறது. முதியோர் கிரிக்கெட் கிளப்! அச்சா! பக் ஹை!" — இது பிரின்ஸிபால் கனகசபை.

சில நிமிட சர்ச்சைக்குப் பிறகு எம். வி. வி. கிரிக்கெட் கிளப் என்பதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆர். வி. வி. அதாவது ரிட்டயர்ட் கிரிக்கெட் கிளப் என்ற திருத்தத்தைக் கொண்டு வந்த ஏகாம்பரம் அதை வெற்றிகரமாக வாபஸ் வாங்கிக் கொண்டார்: "நாம்தாம் ரிட்டயர்ட் ஆகியிருக்கிறோமே தவிர இன்னும் கிரிக்கெட் ரிட்டயர் ஆகலே ஐயா!" என்று கனகசபை விளக்கம் கொடுத்தார்;

"ஒரு 'கோச்'சுக்கு ஏற்பாடு செய்வோமா?" என்றார் சுந்தரம். அவர் அந்த நாட்களில் கிரிக்கெட் மட்டையைத் தொட்டுப் பார்த்தவர்:

"ஏன்? கிரிக்கெட் ஆடணும்னு கோச்சு வண்டியிலேதான் போகணுமா? அடடா! எங்க அப்பா வைத்திருந்த கோச்சு வண்டியை நான்தான் வித்தேன்" என்றார் திருமலை. பாவம், அவர் கிரிக்கெட் மட்டையைத் தொட்டதுகூட இல்லை. 'கோச்' என்றால் பயிற்சி அளிப்பவர் என்ற வியாக்கியானத்தைக் கனகசபை கொடுத்த பிறகுதான் கிளப் பெயர் நின்றது:

தாற்காலிகமாகக் கொட்டாப்புளியை ஒரு ரகசிய 'கோச்'சாக வைத்தும் கொள்வதென்றும் அவன் தினசரி எல்லோர் வீடுகளுக்கும் சில நிமிடங்கள் போய் ஆட்ட நுணுக்கங்களைப் பற்றி விவரிப்பதென்றும் அடுத்த ஞாயிறன்று உள்ளூர் இளைஞர்கள் கிளப்புடன் ஒரு 'மாட்ச்' ஆடுவதன் மூலம் இந்த எம். வி. வி.யின் தோற்றத்தை வெளி உலகுக்கு அறிவிப்பதென்றும் அந்தக் கிரிக்கெட் சபையினர் தீர்மானித்த பிறகு, மேலும் தலா இரண்டு கிளாஸ் மோரைக் காலி செய்து விட்டுக் கலைந்தார்கள்.

இப்படியாகத்தானே, அலங்காபுரம் புது எக்ஸ்டென்ஷனில் ஒரு புது கிரிக்கெட் கிளப் தோன்றியது.

தம்மைத் தாமே ஆத்மார்த்தமாகக் காப்டனாக நியமித்துக் கொண்ட பீமண்ணா அன்றிலிருந்து கையைச் சுழற்ற ஆரம்பித்தார். அவர் வீசிய பந்தும் கல்லும் பட்டுத் தோட்டத்தில் பல அவரைக் கொடிகள் நாசமாயின. ஆனாலும் அன்று குளக் கரையில் விழுந்தது போல் ஒரு 'லெக் பிரேக்' விழவில்லை. ஒரு வேளை அந்தத் தெரு நாயைக் கொண்டு வந்து நிறுத்திக் கல்லாலோ, பந்தாலோ வீசினால் 'லெக் பிரேக்' விழுமோ என்ற சந்தேகம்கூட எழுந்தது. அதற்காக அந்த நாயைத் தேடிப் போக முடியுமா?

"பெரிய ஐயா ஏதும் புதுசாக மந்திரம் கத்துக்கிட்டு இருக்காகளா? சும்மா லெக்கு பக்குன்னு கையை வீசுறாரே!" என்று தோட்டக்காரன் ரகசியமாக ஒரு நாள் கொட்டாப்புளியிடம் கேட்டான். கொட்டாப்புளி விழுந்து விழுந்து சிரித்து விட்டு, "லெக்கு பக்கும் இல்லே! லொக்கு லொக்குமில்லே! லெக் பிரேக்! அதாவது நான் இப்போது அந்தப் பந்தை நேரே சுழற்றி வீசுறேன் பாரு. அது கீழே விழுந்ததும் விழுந்த இடத்திலேயிருந்து எனக்கு இடது பக்கமாகத் திசை மாறித் துள்ளுகிறதில்லையா? அப்படித் துள்ளினால் லெக் பிரேக். அந்தப் பந்தே வலது பக்கமாகத் துள்ளினால் ஆப் பிரேக். பந்தை விரல் இடுக்கிலே பிடிக்கிற தினுசிலே எப்படி வேணுமானாலும் திருப்பலாம்" என்று விளக்கினான். அவன் போட்ட அந்த அற்புத 'லெக் பிரேக்'கை மாத்திரம் தாத்தா பீமண்ணா பார்த்திருந்தால் அங்கேயே பொறாமையால் வெடித்திருப்பார்!

மறு நாள் ஞாயிற்றுக் கிழமை; கொட்டாப்புளி தானே போய் உள்ளூர் இளைஞர்கள் கோஷ்டிக் காப்டனைப் பார்த்து ஒரு டப்பா சாக்லெட் லஞ்சம் கொடுத்து மாட்சுக்கு

ஏற்பாடு செய்து விட்டான். லஞ்சுக்கும் பீமண்ணு ஏற்றுக் கொண்டார். பகாளா பாத், வெங்காய வடை, மசாலா தோசை. மாணவர்கள் கோஷ்டி ராத்திரியேகூட ஆடத் தயார். லஞ்ச் ஐயிட்டங்கள் நாக்கில் தண்ணீர் ஊறச் செய்தன. அவர்களே எதிர்க் கட்சிக்கு மட்டைகள் சப்ளை செய்ய ஒப்புக் கொண்டார்கள். உள்ளூர்க் கடையில் கிடைத்த இரண்டே பந்துகளைப் பீமண்ணு வாங்கி வரச் சொன்னார்.

ஞாபகமாக இரவில் நண்பர்கள் அனைவருக்கும் டெலிபோன் பண்ணினார். மறுநாள் காலையில் பத்து மணிக்கு எல்லோரையும் வெள்ளைப் பாண்டு சட்டையில் வரச் சொன்னார். இருமலே மாத்திரம் பகாளாபாத்துக்குக் கொத்துமல்லி சட்னி கொண்டு வரும்படி இரண்டு தடவைகள் வற்புறுத்தினார்.

ஞாயிற்றுக்கிழமை பொழுதும் இன்பமாகப் புலர்ந்தது. ஹைஸ்கூல் டீம் ஆட்டக்காரர்கள் ஒன்பது மணிக்கே வந்து விட்டார்கள். சரியாக ஒன்பதே முக்காலுக்கு பீமண்ணு தம் காரில் 'லஞ்ச்' கூடைகள் சகிதம் வந்து சேர்ந்தார். அவர் நண்பர்கள் யாரும் இன்னும் எட்டியே பார்க்கவில்லை !

ஹைஸ்கூல் மாணவர்களுக்கு 'டாஸ்' போடு முன்பே 'லஞ்சை' வைத்துக் கொண்டு விடலாமே என்ற சபலம். வெங்காய வடை வாசனை பவுண்டரி வரை வீசியது. ஒரு வேளை பீமண்ணு கட்சி 'லஞ்ச்' நேரத்துக்கு முன்னால் தோற்றுப் போய் விட்டால் அவர் 'லஞ்ச்' கூடைகளைத் திருப்பிக் கொண்டு போய் விடுவாரோ என்ற பயம் வேறு !

பத்தரை மணி ஆட்டத்துக்குப் பத்தே கால் வரை பீமண்ணுவின் கோஷ்டியினர் யாருமே தென்படவில்லை. பீமண்ணு மாத்திரம் பதறினார். அந்தப் பதற்றத்திலும் அவர் கை சுழன்று கொண்டே இருந்தது. 'லெக் பிரேக்' 'லெக் பிரேக்' என்று உதடுகள் முணுமுணுத்தன.

பத்து இருபதுக்குக் கொட்டாப்புளியைத் தம் கார் டிரைவருடன் நண்பர்கள் வீடுகளுக்கு அனுப்பினார். அவர்கள் வேட்டி கட்டிக் கொண்டிருந்தாலும் அப்படியே தூக்கிக் காரில் போட்டுக் கொண்டு வரும்படி உத்தரவிட்டார். நேரத்தை வெட்டியாகக் கழிக்காமல் இரண்டு 'ட்ரையல்' பந்துகள் வீசலாம் என்ற யோசனையை வெளியிட்டார்.

மாணவன் ஒருவன் மட்டையைப் பிடித்துக் கொள்ளப் பீமண்ணு பத்தடி ஓடி வந்து பந்தை வீசினார். அடுத்த வினாடியில் இருபது கஜங்கள் தள்ளி இடது பக்கத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மாணவர்கள் கோஷ்டியின் மத்தியிலிருந்து 'ஹா' என்ற அலறல் கேட்டது. தலையைப் பிடித்துக் கொண்டு ஒரு மாணவன் கீழே உட்கார்ந்தான். பந்து அவன் தோள் வழியாகக் கீழே உட்கார்ந்து இறங்கி அவன் காலடியில் தஞ்சம் புகுந்தது.

"சார், ஹெட் பிரேக் போடுறீரோய்" என்று ஒரு பையன் கத்தினதையும் பொருட்படுத்தாமல் பீமண்ணு ஓடினார் ! அந்தப் படுபாவிப் பந்து எந்தத் திசையிலே கைதழுவி ராம பாணமாகப் பாயும் என்று கண்டாரா? நல்ல வேளை! ரத்தக் காயம் ஒன்றுமில்லை. பந்து பட்ட இடம் பத்தாகப் புடைத்து விட்டது. "அந்தப் பாவி டாக்டர் கிருஷ்ணன் இதற்காகவாவது வந்திருக்கக் கூடாதோ?" என்று மனத்துக்குள் பிரலாபித்தார்.

அடிபட்ட பையன் வீட்டுக்குத் திரும்பத் தயாராயில்லை. பகாளாபாத்தை ஒரு பிடி பிடித்து விட்டுத்தான் போக வேண்டும் என்ற தீர்மானத்துடன் வந்தவனாயிற்றே! "இது ஒன்றும் பிரமாதம் இல்லே சார்!" என்று உட்கார்ந்துவிட்டான்.

பதினொன்றரை மணிக்குக் கொட்டாப்புளி மாத்திரம்தான் டிரைவருடன் காரில் திரும்பி வந்தான்; தாத்தாவைத் தனியாக அழைத்துக் கொண்டு போய், "தாத்தா! இன்றைக்கு மாட்ச் கான்ஸல்டு? அவர்கள் ஒருவரும் வரமாட்டார்கள்!" என்றான்.

"ஏண்டா! ஏதாவது போட்டி கிளப் ஆரம்பித்து விட்டார்களா? நான் வேண்டுமானால் காப்டன் பதவியை ராஜிநாமாப் பண்ணிடறேண்டா! கனகசபையே காப்டனாக இருக்கட்டும்டா!" என்று பதறினார்.

"தாத்தா! போட்டி கிளப்புமில்லே! ஒண்ணுமில்லே; ஒவ்வொருத்தர் ஒவ்வொரு காரணம் சொன்னாங்க; ஆனா உண்மையான காரணம் எனக்குத் தெரியும்."

"சொல்லுடா ! சொல்லுடா" என்று தாஜாப் பண்ணினார் தாத்தா.

"அந்த ஆக்ஸிடெண்டல் இன்ஷூரன்ஸ் கம்பெனி ஏஜண்ட் அன்னுசாமி இல்லே ! அரட்டை ! அவர் இன்னிக்குக் காலையிலே உங்க நண்பர்கள் வீட்டுக்கெல்லாம் போயிருக்கிறார், குறைந்த பிரீமியத்திலே கால் ஒடிஞ்சா, கை ஒடிஞ்சா, மண்டை உடைஞ்சா எவ்வளவு பணம் அவர்கள் கம்பெனி கொடுக்கும் என்று விவரமாகச் சொல்லி ஆஸ்திரேலியா இங்கிலாந்து அங்கெல்லாம் யார் யார் எப்படி அடிபட்டுப் பணம் வாங்கியிருக்கிறார்கள் என்று புள்ளி விவரம் கொடுத்திருக்கிறார் ! அவ்வளவுதான்! உங்க பங்க் பிரண்ட்ஸ் ஏர் ரெய்டு ஷெல்டருக்குள்ளே ஒளியற மாதிரி உட்கார்ந்துவிட்டார்கள்! இருமலே நாளைக்கு வர அமாவாசையை இன்னிக்கே வந்துடுத்துங்கிறார்; கனகசபை கால் வலிக்கிறது? ஆகவே இன்னிக்கு ஒருத்தரும் வர மாட்டா !" கொட்டாப்புளி திருத்தினான்.

"அட, பாவி அன்னுசாமி! சமயம் பார்த்துப் பழி வாங்கிவிட்டானே! அன்னிக்கு என்கிட்டே ஒரு சர்டிபிகேட்டுக்குக் கையெழுத்து வாங்க வந்தான். நான் முடியாதுன்னேன். அதனாலே......"

"இன்னிக்கு உங்க நண்பர்களைப் பய முறுத்திவிட்டான்" என்றான் கொட்டாப்புளி.

"லஞ்ச்" டைம் என்று அறிவித்தார் பீமண்ணு. அடுத்த அரை மணி நேரம் குளத்தங்கரை மைதானம் கோவில் மடப் பள்ளியாக மணத்தது.

"மாட்ச் இன்றைக்கு டிரா என்று வைத்துக் கொள்வோம்" என்றார் பீம்.

"இப்படி டிரா மாட்ச்களே அடிக்கடி வரவேண்டும்" என்ற மாணவர்களின் கோஷ்டி கானம் மைதானம் முழுதும் எதிரொலித்தது.

# போனஸ்



மேனகா மில்லின் அதிபரான பசுபதியின் முன்னால் அவரது ஆலையில் பணி புரியும் அத்தனை ஊழியர்களும் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருந்தனர். பசுபதி அவர்களை யெல்லாம் மொத்தமாகவும், தனித்தனியாகவும் திரும்பத் திரும்பக் கேட்டார்: ""இப்போதாவது சொல்லப் போகிறீர் களா, இல்லையா? வாசு உங்களிடம் என்ன சொன்னான்? எதைச் சொல்லி உங்கள் மனத்தைக் கலைத்து விட்டு ஊருக்கு ஓடிப் போயிருக்கிறான்?""

ஆனால் இத்தனைக்கும் தொழிலாளர்கள் ஒருவராவது வாயைத் திறக்க வேண்டுமே!

""போங்கள், சோறு அளிக்கிற என்னை விட, உபதேசம் செய்கிற உங்கள் தலைவன்தான் பெரியவனாகி விட்டானோ? ஓடுங்கள். என் முன் யாரும் நிற்க வேண்டாம்.""

மில்லை ஆரம்பித்துப் பூசை போட்ட அன்றையிலிருந்து வாசு அவர் கம்பெனியில் தான் இருக்கிறான். பெற்ற பிள்ளையைப் போல், பசுபதிக்கு வாசுவினிடம் விசுவாசம். உடன் பிறந்த சகோதரர்களைப் போல் அன்பு வேலை செய்பவர்களிடம் அவனுக்கு விசுவாசம். இதனாலேயே மேனகா மில் முதலாளியைத் தந்தையாகவும், வாசுவைத் தலைமகனாகவும் தொழிலாளர் மதித்தனர்.

வாசுவும் தனக்கென்று எதையும் முதலாளியிடம் சென்று கேட்டதில்லை. கம்பெனி லாபமாகவே நடப்பதால், தொழிலாளருக்கும் பொங்கல் போனஸைப் பெருக்க செய்தான். முதலாளி முதலில் சிரித்துக் கொண்டே இசைந்து விட்டார். நான்கு வருஷங்கள் கழித்துப் போனஸை இரண்டு மாதமாக்கினான் வாசு. சிரிக்காமலே அவர் அதற்கும் மறுக்க வில்லை. ஆனால் பொங்கல் நெருங்குகிற இந்தச் சமயத்தில், ""மீண்டும் வாசு தொழிலாளர்களைக் கூட்டிக்கொண்டு ஏதோ தீவிரமாகப் போனஸ் விஷயமாகப் பேசுகிறான்"" என்று ரகசியமாக மானேஜர் கண்டுபிடித்து வந்து பசுபதியிடம் சொல்லவுமே, ""இவர்களது ஆசைக்கு ஓர் அளவே இல் லையா?"" என்று அவருக்குப் பிரமாதகோபம் வந்து விட்டது.

இந்தச் சமயத்தில் வாசு வேறு ஊரில் இல்லை. ஆனால் அவன் என்ன சொன்னான் என்று கேட்டால், அவரை யாரா வது லட்சியம் செய்தால்தானே? கோபமடைந்த அவர், ""சரி! அவ்வளவு ஒற்றுமையா? வரட்டும். அவனையே கேட்டுத் தீர்த் திக் கேட்கிறேன்"" என்று சமாதானப்படுத்திக் கொண்டார்.

ஆனால் மறு நாளே ஊரிலிருந்து வந்த வாசு அவர் முன் வந்து பவ்வியமாக நிற்கவும் பசுபதிக்குத் 'திக்'கென்றது.

பணிவுடன் வாசு ஒரு கடிதத்தை நீட்டினான். பசுபதி வெறுப்புடன் வாங்கிப் பிரித்தார்.

""அன்புள்ள முதலாளி அவர்களுக்கு,

நமது மில்லில் இந்த வருஷம் உற்பத்திக் குறைவினால் ஏற்பட்ட நஷ்டத்தின் காரணமாக இவ்வருஷ பொங்கல் போனஸை வாசு அவர்களின் சொற்படி விட்டுக் கொடுக்கச் சம்மதித்திருக்கிறோம்"" என்று எழுதி அதன் கீழ் அத்தனை தொழிலாளரும் கையெழுத்திட்டிருந்தனர்.

""முதலில் நான் இதைச் சொன்னபோது பாதிப் பேர் சம்மதிக்கவில்லை. இதனால் மனமுடைந்து நான் ஊருக்குப் போய் விட்டேன். ஆனால் இன்று அனைவரும் சம்மதம் தெரி வித்து என்னை அழைத்து வந்து விட்டனர்"" என்றான் வாசு.

முதலாளியின் கண்கள் பளபளத்தன. கையிலிருந்த கடி தத்தைக் கிழித்தெறிந்தார். அந்தத் தொழிலாளர்களுடைய பெருந்தன்மையைவிட அவரது கௌரவம் சிறுத்தா போய் விட்டது? வியாபாரத்தில் லாபமும் வரும், நஷ்டமும் வரும். அதற்காக இத்தனை அருமை தெரிந்த நம்முடைய தொழிலாள ரின் மகிழ்ச்சிக்குப் பயன்படாத பெரும் சொத்து இருந்து என்ன பயன்?

இப்படி நினைத்தவர் மறுகணமே வாசுவின் கையில் ஒரு பெரும் தொகைக்குச் 'செக்'கைக் கிழித்துக் கொடுத்தார். அதில் வழக்கத்தைவிட எல்லோருக்கும் அதிகமான போன ஸுக்குப் பணம் இருப்பதைக் கண்ட வாசுவின் இமைகள் நன்றிப்பெருக்கால் நனைந்தன.

கே.பி. நீலமணி

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Mess... Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.




நல்ல காபி தயாரிக்க புத்தம்புதிய
பொடியே ஆதாரம்.

# ப்ரூக் பாண்ட் காபி

## எப்பொழுதும் புதியது.

மற்ற காபி பொடிகளுக்கும் ப்ரூக் பாண்ட் காபிக்கும் என்ன வித்தியாசம். ப்ரூக் பாண்ட் காபி உள்ள ஒரு பையை திறந்து பாருங்கள் — விஷயம் புரியும். அது அப்போதே அரைத்த காபிக்கொட்டையின் உண்மையான புது மணம் கமழும்.

பொறுக்கி எடுத்த காபிக்கொட்டைகளை பதமாய் வறுத்து, அரைத்து அவைகள் வீசும் இயற்கையான மணத்தை காற்றுப்புகாத அழகான ஜெலோபேன் பைகளில் அடைப்பதே ப்ரூக் பாண்டின் தனிச் சிறப்பு வாய்ந்தமுறை. இப்பொழுதே ப்ரூக் பாண்ட் காபி அருந்தி அதன் புத்தம் புதிய பூரணமான மணத்தை அனுபவியுங்கள்.

---

*நீங்களும் ப்ரூக் பாண்டும் சேர்ந்து ஒரு கோப்பை அருமையான காபி தயாரிக்க முடியும். அதன் புதுமையையும் நறுமணத்தையும் ருசித்து அனுபவியுங்கள்.*

---

B2/BBC-7A TAM

STERED No. M. 4392
stered as a Newspaper in Ceylon